இந்த சரித்திரத்தை யுண்மையான பத்தியோடும் சிரத்தை யோடும் வாசிப்பவர்கட்கு இம்மையில் ஆயுள், செல்வம், மக்கள், சிவஞானமும் உண்டாய் மறுமையில் பேரின்ப நிலையான சிவபத மும் உண்டாம்.

இது உண்மையான முத்திநிலையின்னதென்பதுணர்த்திற்று. எங்ஙனமெனில், மற்றைய சமயமார்க்கிகளெல்லாரும் கருமதேக மாகிய இத்தூலவுடம்பு பிராரத்தத்தைப் புசித்து ஒழித்து இங் கே விழுந்துபோக ஆன்மா சூக்குமதேகத்தோடு முத்தியடையு மெனவே கூறுவர். ஆனால் திருவாசகம், "செத்தேபோனாற் சிரி யாரோ" என்றதுந் தவிர, "மண்மேல்யாக்கை விழுமாறும் வந் துன்கழற்கேபுகுமாறும், அண்ணாவெண்ணக்கடவேனோ அடிமை சாலவழகுடைத்தே" என்றது. எனவே தேகம்பிணவியலா யிம் மண்ணிலே விழாது மூவகைச்சித்தியுள் ஓர்வகைச் சித்திபெற்று நிற்பதே முடிவான முத்திநிலையென்றவாறாயிற்று. தாயுமானவ ரும், "முத்தியிலுந்தேக மிசைமூவிதமாஞ் சித்திபெற்றோர் – எத் தனைபேரொன்றுரைப்ப தெந்தாய்பராபரமே." என்றார். என்றவர், அம்மட்டில்விடாது, "தேகம்யாதேனுமொரு சித்திபெறச்சீவன் முத்தி-ஆகுநெறிநல்லநெறியையாபராபரமே." என்றார்.

இனி தேகஞ் சித்திபெறப் பெறுமுத்தியேயன்றி, அதுவிழுந் தபின் ஆன்மா முத்திபெறுதலு முண்டு என்று கூறுவாரை நோ க்கி அவரே, "உலகநெறிபோற் சடலமோயவுயிர்முத்தி, யிலகுமெ னல்பந்தவியல்பேபராபரமே." என்று உண்மைகூறி மறுத்தனர்.

குமாரதேவரும், "சுத்தசாதகம்" என்னும் நூலுள்ளே, "தொம்பதம்விளங்கின் மேல்வினைமறைத்த தொல்லிருளகன்று போயொளிக்கும், தம்பதமானதற்பதம்விளங்கிற் சஞ்சிதமாயை போயொளிக்கும், அம்பதமானவசிபதம்விளங்கி லரும்பிராரத்தம் போயொளிக்கும், செம்பரவருளேவடிவதாயான்மா சிவத்தினுக் கங்கமாய்நிகழும்." எனவும்.

"அடுத்தமந்திரண்டுசனனத்தில்வீட்டை யடைந்திடுந்தொ ம்பதநெறியோர் - அடுத்தமற்றொருநற்சனனத்தில்வீட்டையடை ந்திடுந்தற்பதநெறியோர் - அடுத்தவிச்சன னந்தனிலடைந்திடும் வீடசிபதநெறியுளோரிவரும்-அடுத்தவிவ்வுடலோ டடைந்திடா விடின்மேல்யாக்கையொன்றெடுக்குமென்றுணர்வாய்." எ-ம்.

"ஒடுங்கிடுங்காலந்தோன்றினவடைவி னொடுங்கிடுமென்றுரை ப்பதனால் - ஒடுங்கிடுங்காலஞ்சத்தியவாதிக் கொடுங்குமிவ்வுடறன் மாத்திரையில் - ஒடுங்கிடுங்காலமசத்தியவாதிக் கொடுங்குமிவ்வுட

லசத்தியமாய் - ஒடுங்கிடுங்காலமுடலிங்கேவீழ்ந்தா லொடுங்கின தில்லையென்றுணர்வாய்.'' எ-ம்.

"மேலொருவடிவையெடுத்ததேயாகின் மேவுமிவ்வுடலிங்கே வீழும் - மேலொருவடிவையெடுக்கதின்றாகின் மேவுமிவ்வுடலிங் கேவீழா - மேலொருசிவத்தைச்சீவன்சென்றடையுமேவுமிவ்வுட லிங்குத்தானே – மேலொருசிவத்தின்வடிவதாமருளாய்வெளியதா மூலகுகண்டிடவே." எ-ம்.

"சூக்குமமதனினின்றுமுன்வினையிற்றூலதேகமுமுளதாகும்- சூக்குமந்தனது காரணமடையிற் றூலமுஞ்சூக்குமத் தடையும்- சூக்குமந்தனது காரணமடையத் தூலமிங்ககன்றதே யென்றால்- சூக்குமந்தனதுகாரணம்விடுத்துத் தூலமென்றெடுத்ததென்றுண ர்வாய்." எ-ம்.

"தூலவிவ்வுடலைவிடுத்துநில்லாது சூக்குமஞ்சூக்குமம்விடுத் துத்-தூலநில்லாதிதிரண்டையும்விடுத்துத் தொல்லுயிர்நிலாவுயிர் விடுத்துத்-தூலசூக்குமங்கணின்றிடாதுயிருஞ் சூக்குமமும்முடிவ டைந்தால் - தூலமுமுடிவையடைந்திடாதிந்தத்தொல்லுலகினில் விழுந்திடுமோ." எ-ம்.

"வினையினிலெடுத்தவிவ்வுடல்மேலும் வினையுளதெனிலிங்கே யகலும்-வினையிலதெனிலிங்கிவ்வுடலூனே வினையறுமோமயமாகி- வினையுளவுடல்போற்றோற்றன்மாத்திரமாய் விளங்கியேவெந்துறு புரிபோல் - வினையிலாப்பரமமுத்தியில்வெளியாய் விமலநல்லருள தாய்விடுமே." எனவும் விளங்கக்கூறுதல்காண்க.

இன்னுமிக்குமாரதேவர், இவ்விடயத்தில் வேதாகமங்கள் கூ றும் சாதகம், உபாயம் முதலியவெல்லாம் வெளிபெற அந்நூலுட் கூறுதலாலுமுணர்க. இந்நிலை தமக்கரியதென மற்றையவர் விட் டொழிந்தார்கள்போலும்.

இன்னும் அருணகிரிநாதர் – அநுபூதியுள் "சாகாதெனையே சரணங்களிலே" எனவும், "கூகாவெனவென் கிளைகூடியழப் போ காவகைமெய்ப் பொருள்பேசியவா" எனவும் பிறவாற்றாலுங்கூறு தலும், முத்துத்தாண்டவர், "மாணிக்கவாசகர் பேறெனக்குத் தரவல்லாயோ அறியேன்" எனக்கூறுதலும் பிறசான்றோர் கூறு தலும் காண்க.

இனி முத்தியிலேயுந் தேகம்பெறும் மூவகைச் சித்தியாவன, உருவச்சித்தி, அருவச்சித்தி, உருவருவச்சித்தி எனவாம். அவற் றுள் ஆளுடைய நம்பிகளாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளும், சேர மானும் திருமேனியோடுங் கைலைக்குச்சென்றதுபோல்வன உரு

வச்சித்தியாம். அவை சுத்ததேகமெனவும், சுவர்ணதேகமெனவும் பிரணவதேகமெனவும் வழங்கிநிற்கும். அருவச்சித்தியாவது திருவாதவூரடிகள் திருமேனி சிற்சபையிலே பரமாகாசமாகக் கலந்து நின்றது. "உருவெளிதான்வாதவூருத்தமர்க்கல்லாலின்னுங்-குருமொழிநின்றார்க்குமுண்டோ கூறாய்பராபரமே." எனத் தாயுமானவர் கூறுதலும் காண்க. உருவருவச்சித்தியாவது, ஆளுடையபிள்ளையார், முருகனார் முதலியோர்கள் சோதியிற்கலந்ததும் அரசுகள் சிவலிங்கத்துட் கலந்ததும், போல்வன. அன்றித் தம் மேனியையே சிவலிங்கமாக நிறுத்துவதுமாம். ஆதலால், திருவெண்காட்டடிகளும் அங்ஙனம் நிறுவியுலகுய்யவழிகாட்டியவாறும். சிற்றம்பலநாடிகள் முதலிய பலபெரியரும் இவ்வாறே தம்முடம்பைச் சிவலிங்கமாக நிறுத்தியவர்களாம். ஆகவே முத்திமுடிவென்பது இதுவென யாவருமொருதலையாகவுணரற்பாலதாம். இனி திருத்தொண்டத் தொகையுள்ளே கூறிய மெய்ப்பொருளார், ஏனாதிநாதர் முதலிய நம்பெருமக்கள் திருமேனியை மண்மேல் வீழ்த்தியவாறு என்னையெனின், அவர்கள் உலகத்துள்ள பந்த சீவர்கள் உண்மையறிந்துய்யச் சன்மார்க்க முதலிய நான்குமார்க்கங்களையும் நடத்திக்காட்டி யுணர்த்தி யருளக் கருணையால் திருமேனி கொண்ட நிமித்தமூர்த்திகளாதலின், அவ்வவ்வுயிர்களின் வினைப்பரிபாக நிலைமை வெளியாம்படித் தாம் தந்திருமேனியை யிச்சைவழி நிறுத்தி யருளியபடியாம். ஆகலின், அதற்கு இவ்விதிகொள்ளற்க அதனுண்மையைக் குருமுகத்தாற்பெறுக.

வேதவேள்விவிதிமுறைவாழிய
ஆதிநீறெழுத்தைந்தன்பர்வாழிய
பேதியாமுத்திபெற்றவெண்காடனார்
காதைவாழியகற்பவர்வாழியே.

என்னையுமோர்பொருளாக்கி யோரும்வெண்காடரினியகாதை, மன்னியவிவ்வுலகேத்தத் தமிழ்வகுக்கமனம்வலித்தமரபுசான்ற, துன்னியமெய்யன்பரெலாமிகவாழ்கவுயிர்த்தொகைகள்சுகத்திளைக்க, வின்னியனல்லறம்வாழ்க வாழ்கமழையிவ்வுலக மினிதுமாதோ.

திருச்சிற்றம்பலம்.

பட்டினத்துப்பிள்ளையார் என்று வழங்கும்

திருவெண்காடர்சரித்திரம்.

முற்றுப்பெற்றது.

---

உ

# பிழைதிருத்தம்.

## வசனபாகம் முகவுரை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧ | ௧௨ | வழக்துள் ... | வழக்கத்துள் |
| ? | ௪ | கிலர் ... | சிலர் |
| ௪ | ௪௯ | ஆகஷ்டு ... | ஆகஸ்டு |

## புராணம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨ | ௧௩ | னிற் ... | ளிற் |
| ,, | ௨௯ | போலும் ... | போல் |
| ,, | ௩௦ | சளைச்கற்ற ... | சளைக்கற்ற |
| ௭ | ௩௫ | கெ்ாண் ... | கொண் |
| ௮ | ௧௯ | புச்ளை ... | புக்களை |
| ௯ | ௩௪ | நரப்புசரு ... | நரப்புக்கரு |
| ௧௦ | ௧௬ | பிரியா ... | பிரியாது |
| ௨௩ | ௧௪ | வென்சா ... | வெண்கா |
| ௨௬ | ௩௪ | இமையாவர்க் ... | இமையவர்க் |
| ௨௮ | ௪ | செறிந்தும் ... | தெறிந்து |
| ௩௦ | ௨௨ | மிட்டுஞ் ... | மீட்டுஞ் |
| ௩௧ | ௧௦ | கணகை ... | கணக்கை |
| ௩௩ | ௩௪ | முவேழ் ... | மூவேழ் |
| ௩௫ | ௨௦ | பேரன்பு ... | போன்பு |
| ,, | ௩௨ | முகங்நாட்டி ... | முகங்காட்டி |
| ௩௭ | ௧௩ | வியப்படைது ... | வியப்படைந்து |
| ,, | ௩௬ | திருக்காத்தா ... | திருக்கரத்தா |
| ௩௮ | ௧௯ | மூன்றுளும் ... | மூன்றுநாளும் |
| ௫௦ | ௨௧ | யொனிக ... | யோனிக |
| ௫௨ | ௪௪ | நீற்பன ... | நிற்பன |
| ௫௪ | ௧ | அரிமர்க்தன ... | அரிமர்த்தன |
| ,, | ௧௯ | பிரமள் ... | பிரமன் |
| ௫௫ | ௬ | கிரககருபி ... | கிரசருபி |
| ௬௪ | ௨௯ | பம்மை ... | யம்மை |
| ௬௫ | Foot not | "தசை, சசை" ... | "தசை, சதை" |
| ௭௩ | ௨௧ | மூளிவர். ... | முனிவர் |
| ௭௭ | ௧௯ | பொல ... | போல |
| ௭௯ | ௩௪ | மருநவாண ... | மருதவாண |
| ௮௩ | ௩௦ | செய்யதது ... | செய்யத்து |
| ௯௧ | ௩௬ | போவலோடு ... | போரவலோடு |
| ௯௨ | ௨௦ | குறையுளள ... | குறையுள்ள |
| ,, | ௨௭ | குஞச ... | குஞ்ச |
| ௯௩ | ௨௦ | யுனங்கு ... | யுனக்கு |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௯௩ | ௩௫ | வருளிக் ... | வருளிச் |
| ௧௦௭ | ௩௦ | கொணடு ... | கொண்டு |
| ௧௧௫ | ௩௬ | வாகுண ... | வரகுண |
| ௧௧௬ | ௩௭ | வெள்ளே ... | வெள்ளோ |
| ௧௧௭ | ௩௮ | பெருங்நளி ... | பெருங்களி |
| ௧௧௮ | ௨௨ | பெநான் ... | பெறநான் |

## பாட்டுப் பிழைத்திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௧௨ | ௨௮ | வலித்து ... | வலித்து |
| ௧௮ | ௪ | ௨௬ | மெம ... | மெம் |
| ௩௦ | ௧௬ | ௧௧ | சமலத்து ... | கமலத்து |
| ௩௨ | ௧௯ | ௩௨ | யாண்டாணடிட்ட ... | யாண்டாண்டிட்ட |
| ,, | ,, | ௩௮ | பாப்பிப் ... | பரப்பிப் |
| ௩௫ | ௨௩ | ௧ | கைடமே ... | சைடமே |
| ௩௭ | ௨௮ | ௨௩ | சேந்தீ ... | செந்தீ |
| ௪௯ | ௮௨ | ௩ | விச்சரதரர் ... | விச்சாதரர் |
| ௫௩ | ௨ | ௧௧ | தாம்றி ... | தாமறி |
| ௫௫ | ௬ | ௯ | வறதொ ... | வறுதொ |
| ௭௦ | ௧௨ | ௪ | மெங்நள் ... | மெங்கள் |
| ௭௧ | ௨ | ௨ | வேறள ... | வேறுள |
| ௭௩ | ௬ | ௪ | கானத்தி ... | காளத்தி |
| ௭௪ | ௭ | ௧ | குருளே ... | குருளோ |
| ௮௧ | ௬௦ | ௧ | தான்றி ... | தானறி |
| ௮௩ | ௨ | ௩ | ழோற்றி ... | ழொற்றி |
| ௮௭ | ௨௧ | ௩ | மேழையே ... | மேழையோ |
| ௯௧ | ௦ | ௬ | பொஙகர ... | பொங்கர |
| ௯௨ | ௦ | ௨௬ | யெப்பட ... | யெப்படி |
| ௧௦௬ | ௩௭ | ௧ | மனுவு ... | மணுவு |
| ௧௦௯ | ௮௯ | ௧ | ளொணணெய் ... | ளொண்ணெய் |

# பாட்டுமுதற்குறிப்பகராதி.

பாட்டு முதற்குறிப்பகராதி முற்றிற்று.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

பதினோராந்திருமுறையுள்

திருவெண்காடரென்னும்

பட்டினத்துப்பிள்ளையார் அருளிச்செய்த

முதலாவது

# கோயினான்மணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

வெண்பா.

பூமேலயனறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம் - பாமேவு
மேத்து கந்தான் றில்லை யிடத்துகந்தா னம்பலத்தே
கூத்து கந்தான் கொற்றக் குடை. (க)

கலித்துறை.

குடைகொண்டிவ் வையமெலாங் குளிர்வித்தெரிபொற்றிகிரிப், படைகொண்டிகறெறும் பார்த்திவராவதிற் பைம்பொற்கொன்றைத், தொடைகொண்டவார்சடை யம்பலத்தான்றொண்டர்க் கேவல்செய்து, கடைகொண்டபிச்சைகொண் டுண்டிங்குவாழ்தல்களிப்புடைத்தே. (உ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

களிவந்தமுதூறிக் கன்மனத்தை யெல்லாங்
கசியும்படிசெய்துகண்டறிவாரில்லா
வெளிவந்தடியேன்மனம்புகுந்ததென்றால்
விரிசடையும்வெண்ணீறுஞ் செவ்வானமென்ன
வொளிவந்தபொன்னிறமுந்தொன்னடமுங்காட்டு
முடையானுயர்தில்லையம்பலமொன்றல்லா
லெளிவந்தினிப்பிறர்பாற் சென்றவர்க்குப்பொய்கொண்
டிடைமிடைந்தபுன்மொழியா லிச்சையுரையோமே. (௩)

இணைக்குறளாசிரியப்பா.

உரையின்வரையும்பொருளினளவு
மிருவகைப்பட்டவெல்லையுங்கடந்து

தம்மைமறந்துநின்னைநினைப்பவர்
செம்மைமனத்தினுந்தில்லைமன்றினுநட
மாடுமம்பலவாணநீடு
குன்றக்கோமான்றன்றிருப்பாவையை
நீலமேனிமாதிருத்தங்கையைத்
திருமணம்புணர்ந்தஞான்றுபெருமநின்
றூதவிழ்கொன்றைத்தாருமேதமில்
வீரவெள்விடைக்கொடியும்போரிற்
றழங்குந்தமருகப்பறையுமுழங்கொலித்
தெய்வக்கங்கையாறும்பொய்தீர்
* விளையாக்கலியெனுமாணையுநிரைநிரை
யாயிரம்வகுத்தமாயிருமருப்பின்
வெண்ணிறச்செங்கண்வேழமும்பண்ணியல்
வைதிகப்புரவியும்வானநாடு
மையறுகனகமேருமால்வரையுஞ்
செய்வயற்றில்லையாகியதொல்பெரும்
பதியுமென்
றொருபதினாயிரந்திருநெடுநாமமு
முரிமையிற்பாடித்திருமணப்பந்தரு
ளமரர்முன்புகுந்தவறுகுசாத்திநின்
றமர்பெயரொழுதியவரிநெடும்புத்தகத்
தென்னையுமெழுதவேண்டுவனின்னரு
ளாணைவைப்பிற்காணுணவனுவும்
வர்னுறநிமிர்ந்துகாட்டுங்
கானில்வானுளம்புங்கருடனுதலினே. (ச)

வெண்பா.

ஆதரித்தமாலுமறிந்திலனென்றஃதறிந்தே
காதலித்தநாயேற்குங் காட்டுமே - போதகத்தோற்
கம்பலத்தானீணககங்கணத்தான்றென்புலியூ
ரம்பலத்தான்செம்பொனடி. (ரு)

கலித்துறை.

அடியொன்றுபாதலமேழிற்குமப்புறம்பட்டதிப்பான்
முடியொன்றிவ்வண்டங்களெல்லாங்கடந்ததுமுற்றும்வெள்ளைப்
பொடியொன்றுதோளெட்டுத்திக்கின்புறத்தனபூங்கரும்பின்
செடியொன்றுதில்லைச்சிற்றம்பலத்தான்றன்றிருநடமே. (சா)

---

* பொய்தீர்விளையாக் கலியென்பதனுக்கு வேதம், என்று பொருள்கொள்க. அதுவே யவனதாணை இதனுக்குச் சத்தியமெனப் பொருள்கூறுவாருமுளர்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடமாடியேழுலகுமுய்யக்கொண்ட
நாயகரோநான்மறையோர்தங்களோடுந்
திடமாடமதிட்டில்லைக்கோயில்கொண்ட
செல்வரோயுமதருமைதேராவிட்ட
திடமாடியிருந்தவளும்விலக்காவிட்டா
லென்போல்வார்க்குடனிற்கவியல்வதன்று
தடமாலைமுடிசாய்த்துப்பணிந்தவானோர்
* தஞ்சுண்டாயங்கருந்தீநஞ்சுண்டீரே. (எ)

நேரிசையாசிரியப்பா.

நஞ்சுமிழ்பகுவாய்வெஞ்சினமாசுணந்
தன்முதன்முருக்கநென்முதற்சூழ்ந்த
நீர்ச்சிறுபாம்புதன்வாய்க்கெதிர்வந்த
தேரையைவவ்வியாங்கியான்முன்
கருவிடைவந்தவொருநாட்டொடங்கி
மறவாமறலிமுறைபிறழ்பேழ்வா
யயிற்றலையன்னவெயிற்றிடைக்கிடந்தாங்
கருணனியின்றியொருவயிறோம்பற்குப்
பல்லுயிர்செகுத்துவல்லிதினருந்தி
யயர்த்தனனிருந்தும்போலும்பெயர்த்துநின்
றெண்டோள்வீசிக்கண்டோருருகத்
தொல்லெயிலுடுத்ததில்லைமூதூ
ராடுமம்பலக்கூத்தனைப்
பாடுதல்பரவுதல்பணிதலோவிலமே. (அ)

வெண்பா.

இலவிதழ்வாய்வீழ்வாரிகழ்வாரவர்தங்
கலவிகடைக்கணித்துங்காணே - னிலகுமொளி
யாடகஞ்சேரம்பலத்தேயாளுடையார்நின்றுடு
நாடகங்கண்டன்பானநான். (௯)

கலித்துறை.

நானேபிறந்துபயன்படைத்தேனயனுரணனெங்
கோனேயெனத்தில்லையம்பலத்தேநின்றுகூத்துகந்த
தேனேதிருவுள்ளமாகியென்றீமையெல்லாமறுத்துத்
தானேபுகுந்தடியேன்மனத்தேவந்துசந்திக்கவே. (௧௦)

கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

சந்துபுனையவெதும்பிமலரணைதங்கவெருவியிலங்குகலையொடு
சங்குகழலநிறைந்தவயலவர்தஞ்சொனலியமெலிந்துகிளியொடு

* தஞ்சமென்றபாலது - தஞ்செனக்குறைந்துநின்றது.

பந்துகழல்கண்மறந்துதளிர்புனைபண்டைநிறமுமிழந்துநிறையொடு
பண்புதவிரவனங்கனவனொடுநண்புபெருகவிளைந்தவினையன
நந்திமுழவுதழங்கமலைபெறுநங்கைமகிழவணிந்தவரவுக
ணஞ்சுபிழியமுரன்றுமுயலகனைந்துநரலவலைந்தபகிரதி
யந்திமதியொடணிந்துதிலைநகரம்பொனணியுமரங்கினடநவி[மே.
லங்கணரசையடைந்துதொழுதிவளன்றுமுதலெதிரின்றுவளையு

நிலைமண்டிலவாசிரியப்பா.

வரையொன்றுநிறுவியரவொன்றுபிணித்துக்
கடறடவாகமிடலொடும்வாங்கித்
திண்டோளாண்டதண்டாவமரர்க்
கமிர்துணாவளித்தமுதுபெருங்கடவுள்
கடையுகஞ்சென்றகாலத்துநெடுநில
மாழிப்பரப்பிலாழ்வதுபொரூஅ
தஞ்சேலென்றுசெஞ்சேலாகித்தன்
றெய்வவுதரத்துச்சிறுசெலுப்புரையிற்
பௌவமேழேபட்டதுபௌவத்தோ
டுலகுகுழைத்தொருநாஅளுண்டது
முலகமூன்றுமளந்துழியாங்கவ
னீரடிநிரம்பிற்றிலவேதேரி
னுரைப்போர்க்கல்லதவன்குறைவின்றே
யினையனாகியதனிமுதல்வானவன்
கேழற்றிருவுருவாகியாழத்
தடுக்கியவேழுமெடுத்தனனெடுத்தெடுத்
தூழியூழிகீழுறக்கிளைந்துங்
காண்பதற்கரியநின்கழலும்வேண்டுபு
நிகிலலோகமுநெடுமறைத்தொகுதியு
மகிலசராசரமனைத்துமுதவிய
பொன்னிறக்கடவுளன்னமாகிக்
காண்டிலாதநின்கதிர்நெடுமுடியு
மீங்கிவைகொண்டுநீங்காதுவிரும்பிச்
சிறியபொதுவின்மறுவின்றிவிளங்கி
யேவருங்காணவாடுதியதுவெனக்
கதிசயம்விளைக்குமன்றேயதிசயம்
விளையாதுமொழிந்ததெந்தைவளையாது
கல்லினும்வலிததுநல்லிதிற்செல்லாது
தான்சிறிதாயினுமுள்ளிடைநிரம்ப
வான்பொயச்சமாயாவாசை
யிடைந்தனகிடப்பவிடம்பெறலருமையி

லைவர்கள்வர்வல்லிதிற்புகுந்து
மண்மகன்றிகிரியிலெண்மடங்குசுழற்ற
வாடுபுகிடந்தபேடினெஞ்சத்து
நுழைந்தனைபுகுந்துதழைந்தநின்சடையுஞ்
செய்யவாயுமையமர்கண்டமு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமு
மெடுத்தபாதமுந்தடுத்தசெங்கையும்
புள்ளியாடையுமொள்ளிதின்விளங்க
நாடகமாடுதிநம்பகூடும்
வேதநான்கும்விழுப்பெருமுனிவரு
மாதிநின்றிறமாதலின்மொழிவது
பெரியதிற்பெரியையென்றுமன்றே
சிறியதிற்சிறியையென்றுமன்றே
நிறைபொருண்மறைகணான்குநின்னறைகழ
லிரண்டொடுமறிவினிலார்த்துவைத்த
மறையவர்தில்லைமன்றுகிழவோனே. (கஉ)

வெண்பா.

கிழவருமாய்நோய்மூப்புக்கீழ்ப்பட்டுக்காமத்
துழவரும்போயோயுமாகண்டோ - மொழிதெரிய
வாயினாலிப்போதேமன்றினடமாடு
நாயனாரொன்றுரைப்போநாம். (கங)

கலித்துறை.

நாமத்தினாலென் றனக்திருத்தேனறைமாமலர்சேர்
தாமத்தினாலுன்சரண்பணியேன்சார்வதென்கொடுநான்
வாமத்திலேயொருமானைத்தரித்தொருமானைவைத்தாய்
சேமத்தினாலுன்றிருத்தில்லைசேர்வதோர்செந்நெறியே. (கச)

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நெறிதருகுழலையறலென்பர்க ணிழலெழுமதியநுதலென்பர்க
ணிலவினும்வெளிதுநகையென்பர்கணிறம்வருகலசமுலையென்ப [ர்க
ளறிகுவதரிதிவிடையென்பர்க ளடியிணைகமலமலரென்பர்க
ளவயவமினையமடமங்கைய ரழகியரமையுமவரென்செய
மறிமழுவுடையகரனென்கிலர் மறலியைமுனியுமரனென்கிலர்
மதிபொதிசடிலதரனென்கிலர் மலைமகண்மருவுபுயனென்கிலர்
செறிபொழினிலவுதில்லையென்கிலர் திருநடநவிலுமிறையென்கிலர்
சிவகதியருளுமரசென்கிலர் சிலர்நரகுறுவரறிவின்றியே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

அறிவிலொழுக்கமும் பிறிதுபடுபொய்யுங்
கடும்பிணித்தொகையு மிடும்பையீட்டமு

மினையனபலசரக் கேற்றிவினையெனுந்
தொன்மீகாமனுய்ப்பவந்நிலைக்
கருவெனுநெடுநக ரொருதுறைநீத்தத்துப்
புலனெனுங்கோண்மீனலமந்துதொடரப்
பிறப்பெனும் பெருங்கடலுறப்புகுந்தலைக்குந்
துயர்த்திரையுவட்டிற்பெயர்ப்பிடமயர்த்துக்
குடும்பமென்னு நெடுங்கல்வீழ்த்து
நிறையெனுங்கூம்பு முரிந்துகுறையா
வுணர்வெனுநெடும்பாய் கீறிப்புணரு
மாயப்பெயர்ப்படு காயச்சிறைக்கலங்
கலங்குபுகவிழா முன்னமலங்கன்
மதியுடனணிந்த பொதியவிழ்சடிலத்துப்
பையரவணிந்த தெய்வநாயக
தொல்லெயிலுடுத்த தில்லைகாவல
வம்பலர்தும்பை யம்பலவாணநின்
னருளெனுநலத் தார்பூட்டித்
திருவடிநெடுங்கரை சேர்த்துமாசெய்யே. (கசு)

வெண்பா.

செய்யதிருமேனிச்சிற்றம்பலவருக்கென்
றையல்வளைகொடுத்தல்சாலுமே - யையன்றேர்
சேயேவருமளவிற்சிந்தாதமாத்திரமே
தாயேகமதுகையிற்சங்கு. (கஎ)

கலித்துறை.

சங்கிடத்தானிடத் தான்றனதாகச் சமைந்தொருத்தி
யங்கிடத்தாடில்லையம்பலக்கூத்தற்கவிர்சடைமேற்
கொங்கிடத்தார்மலர்க்கொன்றையென்றேயெங்கைநீயுமொரு
பங்கிடத்தான்வல்லையேலில்லையேயுன்பசப்பொழியே. (கஅ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒழிந்ததெங்களூற வென்சொலேலோவெரியி லொன்னலார்கள் புரமுன்னோர்நாள், விழுந்தெரிந்துதுகளாகவென்றிசெய்த வில்லி தில்லைநகர்போலியார், சுழிந்தவுந்தியி லழுந்திமேகலை தொடக்க நின்றவர்நடக்கநோந், தழிந்தசிந்தையினும் வந்ததாகிலுமோர் சிந்தையாயொழிவதல்லவே. (கசு)

நேரிசையாசிரியப்பா.

அல்லல்வாழ்க்கை வல்லிதிற்செலுத்தற்குக்
கைத்தேருழந்துகார்வருமென்று
வித்துவிதைத்தும் விண்பார்த்திருந்துங்
கிளையுடன்றவிரப்பொருளுடன்கொண்டு

முளைமுதிர்பருவத்துப் பதியெனவழங்கியு
மருளாவையவரம்பிடைநடந்து
மிருளூறுபெளவத் * தெந்திரங்கடாஅய்த்
துன்றுதிரைப்பரப்பிற்குன்றுபார்த்தியங்கியு
மாற்றல்வேந்தற்குச்சோற்றுக்கடன்பூண்டுந்
தாளுழந்தோடியும் வாளுழந்துண்டு
மறியாவொருவனைச்செறிவந்துதெருட்டியுஞ்
சொற்பலபுனைந்துங்கற்றனகழறியுங்
குடும்பப்பாச நெடுந்தொடர்ப் பூட்டி
யைவரைந்திடத்திர்ப்பநொய்திற்
பிறந்தாங்கிறந்து மிறந்தாங்குபிறந்துங்
கணத்திடைத்தோன்றிக் கணத்திடைக்கரக்குங்
கொப்புட்செய்கையொப்பின்மின்போ
லுலப்பில்யோனிக்கலக்கத்துமயங்கியு
நெய்யெரிவளர்த்துப்பெய்முகில்பெயறருந்
தெய்வவேதியர்தில்லைமூதூ
ராடகப்பொதுவினடகவிற்றுங்
கடவுட்கண்ணுதனடமுயன்றெடுத்த
பாதப்போதும்பாய்புலிப்பட்டு
மீதியாத்தசைத்தவெள்ளெயிற்றரவுஞ்
சேயுயரகலத்தாயிரங்குடுமி
மணிகிடந்திமைக்குமொருபேராரமு
மருள்பொதிந்தலர்ந்ததிருவாய்மலரு
நெற்றியிற்றிகழ்ந்தவொற்றைநாட்டமுங்
கங்கைவழங்குந்திங்கள்வேணியுங்
கண்ணிடைப்பொறித்துமனத்திடையழுத்தியாங்
குண்மகிழ்ந்துரைக்கவுறுதவஞ்செய்தன
ஹன்முகன்பதத்தின் மேனிகழ்பதந்தா
னுறுதற்கரியதுமுண்டோ
பெறுதற்கரியதோர் பேறுபெற்றேற்கே. (உ0)

வெண்பா.

பெற்றோர்பிடிக்கப்பிழைத்துச்செவிலியர்கள்
சுற்றோடவோடித்தொழாகிற்கு—மொற்றைக்கைம்
மாமறுகச்சீறியசிற்றம்பலத்தான்மான்றேர்போங்
கோமறுகிற்பேதைக்குழாம். (உக)

---

* எந்திரம் எ - து கப்பல்.

கலித்துறை.

பேதையெங்கேயினித்தேறியுய்வாள்பிரமன்றனக்குத்
தாதைதன்றாதையென்றேத்தும்பிரான்றண்புலிசைப்பிரான் [ணி
* கோதையந்தாமத்தன்கொன்றைகொடானின்று கொல்லவெண்
யூதையுங்காருந்துளியொடுங்கூடியுலாவியவே. (உஉ)

கழிநெடிலடியாசிரியச்சந்தவிருத்தம்.

உலவுசலதிவாழ்விடமமரர்தொழவுணவென
  நுகருமொருவருழியினிறுதி யொருவராழிய
புலவுகமழ் † கரோட்கையுடையபுனிதர்பூசுரர்
  புலிசையலர்செய்போதணி பொழிலினிழலின்வாழ்வதோ
கலவமயிலனார்சுருள்கரியகுழலினார்குயில்
  கருதுமொழியினார்கடைநெடியவிழியினாரித
ழிலவிலழகியாரிடைகொடியின்வடிவினார்வடி
  வெழுதுமருமையாரொன திதயமுழுதுமாள்வரோ. (உங)

இணைக்குறளாசிரியப்பா.

ஆளெனப்புதிதின்வந்தடைந்திலமத்தநின்
றாளிணைவழலையினியற்றி
வழிவழிவந்தமரபினமொழிவது
னைந்தெழுத்தவையெஞ்சிந்தையிற்கிடத்தி
நனவேபோலநாடொறும்பழகிக்
கனவிலுநவிற்றுங் காதலேம்வினைகெடக்
கேட்பதுநின்பெருங்கீர்த்திமீட்பது
நின்னெறியல்லாப் புன்னெறிபடர்ந்த
மதியினெஞ்சத்தை வணாந்துநிதியென
வருத்திசெய்திடுவ துருத்திரசாதனங்
காலையுமாலையுங்கால்பெயர்த்திடுவதுன்
னாலயம்வலம்வருதற்கேசால்பினிற்
கைகொடுகுயிற்றுவ தையநின்னது
கோயிற்பல்பணி குறித்தேயோயா
துருகிநின்னினைந் தருவிசோரக்
கண்ணிற்காண்பதெவ்வுலகினுங்காண்பன
வெல்லாம்
நீயேயாகிநின்றதோர்நிலையே
நாயேன்
றலைகொடுசார்வதுன்சரண்வழியல்லா

* கோதையந்தாமத்தண் கொன்றையென்பதூஉம்பாடம்.
† கரோடிகை எ-து தலைமாலை.

லலைகடல்பிறழினுமடாதேயதனும்
பொய்த்தவவேடர்கைத்தகப்படுத்தற்கு
வஞ்சச்சொல்லின்வார்வலைபோக்கிச்
சமயப்படுகுழிசமைத்தாங்கமைவயின்
மானிடமாக்களைவலியப்புகுத்து
மானுவிரதத்தசப்படுத்தாழ்த்து
வளைவுணர்வெனக்குவருமோவுள்தரு
நுரையுந்திரையு * நொப்புறுகொட்பும்
வரையில்சிகர வாரியுங்குரைகடற்
பெருத்துஞ்சிறுத்தும் பிறங்குவதோன்றி
யெண்ணிலவாகி யிருங்கடலடங்குந்
தன்மைபோலச்சராசரமனைத்து
நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ
யொன்றினுந்தோன்றாயொன்றினுமடங்காய்
வானோர்க்கரியாய்மறைகளுக்கெட்டாய்
நான்மறையாளர் நடுவுபுக்கடங்கிச்
செம்பொற்றில்லைமூதா
ரம்பலத்தாடு மும்பர்நாயகனே. (உச)

வெண்பா.

நாயனையவென்னைப்பொருட்படுத்திநன்களித்துத்
தாயனையனருளுந்தம்பிரான்—றூயவிரை
மென்றுழாய்மாலொடயன்றேடவின்றில்லை
மன்றுளேயாடுமணி. (உரு)

கலித்துறை.

மணிவாய்முகிழ்ப்பத்திருமுகம்வேர்ப்பவம்மன்றுக்கெல்லா
மணியாயருணடமாடும்பிரானையடைந்துருகிப்
பணியாய்புலன்வழிபோநெஞ்சமேயினிப்பையப்பையப்
பிணியாய்க்கடைவழிசாதியெல்லோரும்பிணமென்னவே. (உசு)

எழுசீர்க்கழிநெடிலடிச்சந்தவிருத்தம்.

என்னுமினிமடவரலாய்செய்குவ தினமாய்வண்டுகண்மலர்கிண்டித், தென்னுவெனமுரல்பொழில்சூழ்தில்லையுளானூர்திருமுடியணிதாமந், தன்னலல்லதுதீராதென்னிடர்தகையாதுயிர்கருமுகிலேறி, மின்னுநின்றதுதுளிவாடையும்வரவீசாநின்றதுபேசாயே; ()

இணைக்குறளாசிரியப்பா.

பேசுவாழிபேசுவாழி
யாசையொடுமயங்கிமாசுறுமனமே

* நொப்பு எ-து தடை.

2

பேசுவாழி பேசுவாழி
கண்டனமறையுமுண்டனமலமாம்
பூசினமாசாம்புணர்ந்தனபிரியு
நிறைந்தனகுறையு முயர்ந்தனபணியும்
பிறந்தனவிறக்கும்பெரியனசிறுக்கு
மொன்றொன்றொருவழிநில்லாவன்றியுஞ்
செல்வமொடுபிறந்தோர் தேசொடுதிகழ்ந்தோர்
கல்வியிற்சிறந்தோர் கடுந்திறன்மிகுந்தோர்
கொடையிற்பொலிந்தோர் படையிற்பயின்றோர்
குலத்தினுயர்ந்தோர் நலத்தினின்வந்தோ
ரனையவொருங்குலத்தின ரிறந்தோரனையவர்
பெருகின்றிலபோலுந்தேரி
னீயுமஃதறிதியன்றேமாயப்
பேய்த்தேர்போன்றுநீப்பருமுறக்கத்துக்
கனவேபோன்றுநனவுபெயர்பெற்ற
மாயவாழ்க்கையைமதித்துக்காயத்தைக்
கல்லினும்வலிதாக் கருதிப்பொல்லாத்
தன்மையரிழிவுசார்ந்தனைநீயு
நன்மையிற்றிரிந்த புன்மையையாதலி
னழுக்குடைப்புலன்வழி யிழுக்கத்தினெழுகி
வளைவாய்த்தூண்டிலி னுள்ளிரைவிழுங்கும்
பன்மீன்போலவு
மின்னுபுவிளக்கத்துவிட்டில்போலவு
மாசையாம்பரிசத் தியானைபோலவு
மோசையின்விளிந்த புள்ளுப்போலவும்
வீசியமணத்தின் வண்டுபோலவு
முறுவதுணராச் செறுவுழிச்சேர்ந்தனை
நுண்ணூனூற்றுத்தன்னகப்படுக்கு
மறிவில்கீடத்து நந்துழிப்போல
வாசைச்சங்கிலிப் பாசத்தொடர்ப்பட்
டிடர்கெழுமனத்தினோ டியற்றுவதறியாது
குடர்கெழுசிறையறைக் குறங்குபுகிடத்தி
கறவைநினைந்த கன்றெனவிரங்கி
மறவாமனத்து மாசறுமடியார்க்
கருள்சுரந்தளிக்கு மற்புதக்கூத்தனை
மறையவர்தில்லை மன்றுளாடு
மிறையவனென்கிலை யென்னினைந்தனையே. (௨௮)

வெண்பா.

நினையார்மெலியார்நிறையழியார்வாளாப்
புனைவார்க்குக்கொன்றைபொதுவோ-வனைவிரு
மெச்சியேகாணவியன்றில்லையானருளென்
பிச்சியேநாளைப்பெறும். (உகூ)

கலித்துறை.

பெறுகின்றவெண்ணிலிதாயரும்பேறும்யானுமென்னை
யுறுகின்றதுன்பங்களாயிரகோடியுமோய்வொடுஞ்சென்
றிறுகின்றநாள்களுமாகிக்கிடந்தவிடுக்கணெல்லா
மறுகின்றனதில்லையாளுடையான்செம்பொனம்பலத்தே. (௩0)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அம்பலவரங்கண்ரடைந்தவர்தமக்கே
யன்புடையனொன்னுமிதெனுனையையுரித்துக்
கம்பலமுவந்தருளுவீர்மதனன்வேவக்
கண்டருளுவீர்பெரியகாதலறியாதே
வம்பலர்நிறைந்துவசை பேசவொருமாடே
வாடையுயிரீரமணிமாமையுமிழந்தென்
கொம்பலமருந்தகைமைகண்டுதகவின்றிக்
கொன்றையருளீர்கொடியிரொன்றருளுவீரோ. (௩க)

இணைக்குறளாசிரியப்பா.

அருளுவாழியருளுவாழி
புரிசடைக்கடவுளருளுவாழி
தோன்றுழித்தோன்றிநிலைதபக்கறங்கும்
புற்புதச்செவ்வியின்மக்கள்யாக்கைக்கு
நினைப்பினுங்கடிதே யிளமைநீக்க
மதனினுங்கடிதேமூப்பின்றொடர்ச்சி
யதனினுங்கடிதேகதுமெனமரணம்
* வாணாள்பருகியுடம்பைவறிதாக்கி
நாணாள்பயின்றநல்காக்கூற்ற
மினையதன்மையதிதுவேயிதனை
யெனதெனக்கருதியிதற்கென்றுதொடங்கிச்
செய்தனசிலவேசெய்வனசிலவே
செய்யாநிற்பனசிலவேயவற்றிடை
நன்றென்பசிலவேதீதென்பசிலவே
† யொன்றினும்படாதனசிலவேயென்றிவை

* வாழ்நாள் - வாணாளெனமரீஇயது. † ஒன்றினும் படாத வினையாவன, கைநொடித்தல், நெட்டிவிடல், அழுக்குருட்டல், மூச்சுவிடன்முதலியன. இது, நல்வினை தீவினைக்கு ளடங்காது வேறுவினை யெனவும்படும், இதனை யிலக்கண க்கொத்தானுமுணர்க.

கணத்திடைநினைந்துகளிப்பவுங்கலுழ்பவுங்
கணக்கில்கோடித்தொகுதியவைதா
மொன்றென்றுணர்வுழிவருமோவனைத்து
மொன்றுவுணர்வுழிவருமோவென்றென்று
தெளிவுழித்தேறல்செல்லேமளிய
மனத்தின்செய்கைமற்றிதுவேநீயே
யரியைசாலவெம்பெருமதெரிவுழி
னுண்டாய்த்தோன்றுவயாவையுநீயே
கண்டனையவைநினைக்காணுவதுதா
* னின்வயின்மறைத்தோயல்லையுன்னை
மாயாய்மன்னினைநீயேவாழி
மன்னியுஞ்சிறுமையிற்கரந்தோயல்லை
பெருமையிற்பெரியோய்பெயர்த்துநீயே
பெருகியுஞ்சேணிடைநின்றோயல்லை
தேர்வோர்க்குத்தம்மினுமணியைநீயே
நண்ணியுமிடையொன்றின்மறைந்தோயல்லை
யிடையிட்டுநின்னைமறைப்பதுமில்லை
மறைப்பினுமதுவு
நீயேயாகினின்றதோர்நிலையே
அஃதான்று
நினைப்பருங்காட்சிநின்னிலையிதுவே
நினைப்புறுங்காட்சியென்நிலையதுவே
யினிநனியிரப்பதொன்றுடையமனமருண்டு
புன்மையினினைத்துப்புலன்வழிப்படரினு
நின்வயினினைந்தேமாகுதனின்வயி
னினைக்குமாநினைக்கப்பெறுதலனைத்தொன்று
நீயேயருளல்வேண்டும்வேய்முதிர்
கயிலைபுல்லெனவெறிவிசும்புவறிதாக
விரும்பருய்யவம்பலம்பொலியத்
திருவளர்தில்லைமூதூ
ரருநடங்குயிற்றுமாதிவானவனே. (௩௨)

வெண்பா.

வானோர்பணியமணியாசனத்திருக்கு
மானதசெல்வத்தரசன்றே—மானகம்
பந்திப்பார்நின்றாடும்பைம்பொன்னினம்பலத்தே
வந்திப்பார்வேண்டாதவாழ்வு. (௩௩)

* நின்வயின் மறைத்தோயல்லை யுளையாய் மன்னினை நீயேவாழி எனவும் பாடம்.

கலித்துறை.

வாழ்வாகவுந்தங்கள்வைப்பாகவுமறையோர்வணங்க
வாள்வாய்திருத்தில்லையம்பலத்தாயுன்னையன்றியொன்றைத்
தாழ்வா ‡ ரறியார்கடனஞ்சையுண்டிலையாகிலன்றே
மாள்வார்சிலரையன்றோதெய்வமாகவணங்குவதே. (௩௪)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வணங்குமிடையீர்வறிதுவல்லியிடையாண்மேன்
மாரசரமாரிபொழியப்பெறுமனத்தோ
டுணங்கியிவடானுமெலியப்பெறுமிடர்க்கே
யூதையெரிதூவியுலவப்பெறுமடுத்தே
பிணங்கியரவோடுசடையாடநடமாடும்
பித்தரெனவும்மிதயமித்தனையுமோரீ
ரணங்குவெறியாடுமறியாடுமதுவீரு
மையலையுமல்லலையுமல்லதறியீரோ. (௩௫)

நேரிசையாசிரியப்பா.

ஈரவேரித்தார் வழங்குசடிலத்துக்
குதிகொள்கங்கைமதியின்மீதசைய
வண்டியங்குவரைப்பினெண்டோட்செல்வ
வொருபாற்றோடுமொருபாற்குழையு
மிருபாற்பட்ட மேனியெந்தை
யொல்லொலிப்பழனத் தில்லைமூதூ
ராடகப்பொதுவி னாடகநவிற்று
மிமையாநாட்டத் தொருபெருங்கடவுள்
வானவர்வணங்குந் தாதையானே
மதுமழைபொழியும் புதுமந்தாரத்துத்
தேனியங்கொருசிறைக்கானகத்தியற்றிய
தெய்வமண்டபத் தைவகையமளிச்
சிங்கஞ்சுமப்ப வேறிமங்கைய
ரிமையாநாட்டத் தமையாநோக்கத்
தம்மார்புபருகச் செம்மாந்திருக்கு
மாணச்செல்வத்து வானோரின்ப
மதுவேயெய்தினுமெய்துக்கதுமெனத்
தெறுசொலாளருறுசினந்திருகி
யெற்றியுமீர்த்துங் குற்றங்கொளீஇ
யீர்ந்தும்போழ்ந்துமெற்றுபுகுடைந்தும்
வார்ந்துங்குறைத்து மதநாய்க்கீந்துஞ்
செக்குரற்பெய்துந் தீநீர்வாக்கியும்

‡ எறிவார் என்றும் பாடம்.

புழுக்குடையழுவத் தழுக்கியல்சேற்றுப்
பன்னெடுங்கால மழுத்தியின்று
வரையிறண்டத்து மாறாக்கடுந்துயர்
நிரையஞ்சேரினுஞ் சேர்கவுரையிடை
யேனோன்னையாளுது விரும்பி
நல்லனெனினு மென்கவவரோ
யல்லனெனினு மென்கநில்லாத்
திருவொடுதிளைத்துப் பெருவளஞ்சிதையா
தின்பத்தழுந்தினு மழுந்துகவல்லாத்
துன்பந்துதையினுந் துதைகமுன்பி
ளமையொடுபழகிக் கழிமூப்புக்குறுகா
தென்றுமிருக்கினு மிருக்கவன்றி
யின்றேயிறக்கினு மிறக்கவொன்றினும்
வேண்டலுமிலனே வெறுத்தலுமிலனே
யாண்டகைக்குரிசினின் னடியரொடுங்குழுமித்
தெய்வக்கூத்துநின் செய்யபாதமு
மடையவுமணுகவும்பெற்ற
கிடையாச்செல்வங் கிடைத்தலானே. (கசு)

வெண்பா.

ஆனேறேபோந்தாலழிவுண்டேயன்புடைய
நானேதான்வாழ்ந்திடினு நன்றன்றே - வானோங்கு
வாமாண்பொழிற்றில்லைமன்றைப்பொலிவித்த
கோமானையித்தெருவேகொண்டு. (கஎ)

கலித்துறை.

கொண்டல்வண்ணத்தவனான்முகனிந்திரன்கோமகுடத்
தண்டர்மிண்டித்தொழுமம்பலக்கூத்தனுக்கன்புசெய்யா
மிண்டர்மிண்டித்திரிவாரெனக்கென்னினிநானவன்றன்
றொண்டர்தொண்டர்க்குத்தொழும்பாய்த்திரியத்தொடங்கினனே

இரட்டைக்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தொடரநரைத்தங்கமுன்புளவாயின
தொழில்கண்மறுத்தொன்றுமொன்றியிடாதொரு
சுளிவுதலைக்கொண்டுபுன்புலைவாரிக
டுளையொழுகக்கண்டுசிந்தனையோய்வொடு
நடைகெடமுற்கொண்டபெண்டிர்பொறுவொரு
நடலைநமக்கென்று வந்தனபேசிட
நலியிருமற்கஞ்சியுண்டிவெறாவிழு
நரகவுடற்கன்புகொண்டலைவேனினி
மிடலொடிபப்பண்டி லங்கையர்கோனெரு

விரலினமுக்குண்டுபண்பலபாடிய
விரகுசெவிக்கொண்டுமுன்புளதாகிய
வெகுளிதவிர்த்தன்றுபொன்றியிடாவகை
திடமருள்வைக்குஞ்செழுஞ்சுடரூறிய
தெளியமுதத்தின் கொழுஞ்சுவைநீடிய
தில்லைநகரிற்செம்பொனம்பலமேவிய
சிவனைநினைக்குந்தவஞ்சதுராவதே. (௧௯)

நேரிசையாசிரியப்பா.

சதுர்முகன் றந்தைக்குக்கதிர்விடுசட்வு
ளாழிகொடுத்தபேரருள்போற்றி
முயற்சியொடுபணிந்த வியக்கர்கோனுக்கு
மாநிதியிரண்டுமாளுப்பெருவளத்
தளகையொன்றுந்தளர்வின்றிநிறுவிய
செல்வங்கொடுத்தசெல்வம் போற்றி
தாணிழலடைந்தமாணிக்காக
நாண்முறைபிறழாது கோண்முறைவலித்துப்
பதைத்துவருங்கூற்றைப்படிமிசைத்தெறிக்க
வுதைத்துயிரளித்தவுதவிபோற்றி
குலைகுலைகுலைந்தநிலையாத்தேவர்
படுபேரவலமிடையின்றிவிலக்கிக்
கடல்விடமருந்தினகருணைபோற்றி
தவிராச்சீற்றத்தவுணர்மூவெயி
லொல்லனல்கொளுவியொருநொடிபொடிபட
வில்லொன்றுவளைத்தவீரம்போற்றி
பூமென்கரும்பொடுபொடிபடநிலத்துக்
காமனைப்பார்த்த கண்ணுதல்போற்றி
தெய்வயாளிகைமுயன்று கிழித்தெனக்
கரியொன்றுரித்த பெருவிறல்போற்றி
பண்டுபெரும்போர்பார்த்தனுக்காகக்
கொண்டுநடந்தகோலம்போற்றி
விறற்பதமொன்றில் வெள்ளிமலையெடுத்த
வரக்கனைநெரித்தவாண்மைபோற்றி
விலங்கல்விண்டுவிழுந்தெனமுன்னாட்
சலந்தரற்றடிந்த தண்டம்போற்றி
தாதையையெறிந்தவேதியச்சிறுவற்குப்
பரிகலங்கொடுத்ததிருவுளம்போற்றி
நின்முதல்வழிபடத்தன்மகற்றடிந்த
தொண்டர்மனையிலுண்டல்போற்றி

வெண்ணெயுண்ணவெண்ணுபுவந்து
நந்தாவிளக்கை நுந்துபெயர்த்த
தரவுபுல்லெலிக்குழூவுலகாள
நொய்தினிலளித்தகைவளம்போற்றி
பொங்குளையழல்வாய்ப்புகைவிழியொருதனிச்
சிங்கங்கொன்றசேவகம்போற்றி
வரிமிடற்றெறுழ்வலிமணியுருபகுவா
யுரகம்பூண்டவொப்பனைபோற்றி
கங்கையுங்கடுக்கையுங் கலந்துழியொருபாற்
றிங்கள்சூடியசெஞ்சடைபோற்றி
கடவுளிருவரடியுமுடியுங்
காண்டல்வேண்டக்கனற்பிழம்பாகி
நீண்டுநின்ற நீளம்போற்றி
யாலம்பில்குநின் சூலம்போற்றி
கூறுதற்கரியநின்னேறுபோற்றி
யேகவெற்பன்மகிழூமகட்கிடப்
பாகங்கொடுத்தபண்புபோற்றி
தில்லைமாநகர்போற்றிதில்லையுட்
செம்பொனம்பலம்போற்றியம்பலத்
தாடுநாடகம்போற்றியென்றுங்
கென்றும்போற்றிஞமென்றனக்கிறைவ
வாற்றலில்லையாயினும்
போற்றிபோற்றிநின்பொலன்பூவடிக்கே. (சo)

திருச்சிற்றம்பலம்.

கோயிஞன்மாணிமாலை முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

உ-வது திருக்கழுமல

# மும்மணிக்கோவை.

திருச்சிற்றம்பலம்.

இணைக்குறளாசிரியப்பா.

திருவளர்பவளப் பெருவரைமணந்த
மரகதவல்லி போலொருகூற்றின்
இமயச்செல்வி பிரியாதுவிளங்கப்
பாய்திரைப்பரவை மீமிசைமுகிழ்த்த
அலைகதிர்ப்பரிதி யாயிரந்தொகுத்த
வரன்முறைதிரியாது மலர்மிசையிருந்தெனக்
கதிர்விடுநின்முகங் காண்டொறுங்காண்டொறும்
முதிராவிளமுலை முற்றாக்கொழுந்தின்
திருமுகத்தாமரைச் செவ்வியின்மலரநின்
தையல்வாணுதற் றெய்வச்சிறுபிறை
இளநிலாக்காண்டோறு மொளியொடும்புணர்ந்தநின்
செவ்வாய்க்குமுதஞ் செவ்விசெய்யநின்
செங்கைக்கமல மங்கைவனமுலை
அமிர்தகலச மமைவினேந்த
மலைமகடனாது நயனக்குவளைநின்
பொலிவினெடுமலர மறையோர்கழுமல
நெறிநின்றுபொலிய நாகர்நாடு
மீமிசையிதந்து மீமிசையுலகம்
கீழ்முதற்றாழ்ந்து
ஒன்றாவந்த குன்றாவெள்ளத்
துலகமூன்றுக்குங் களைகணாகி
முதலில்கால மினிதுவீற்றிருந்துழித்
தாதையொடுவந்த வேதியச்சிறுவன்
தளர்நடைப்பருவத்து வளர்பசிவருத்த
அன்னாயோவென் றழைப்பமுன்னின்று
ஞானபோனகத்தரு ளட்டிக்குழைத்த
ஆனாத்திரளை யவன்வயினருள
அந்தணன்முனிந்து தந்தார்யாரென
அவனைக்காட்டுவ னப்பவானார்
தோலுடைய செவியனென்றும்
பீடுடையபெம்மானென்றும்
கையிற் சுட்டிக்காட்ட
ஐயநீவெளிப்பட் டருளினையாங்கே, (௧)

வெண்பா.

அருளின்கடலடியே னன்பென்னுமாறு
பொருளின்றிரள்புகலி நாதன் - இருள்புகுதுங்
கண்டத்தானென்பாரைக் காதலித்துக்கைதொழுவார்க்
கண்டத்தார்தாமா ரதற்கு. (உ)

(கட்டளைக்கலித்துறை.)

ஆரணநான்கிற்கு மப்பாலவ னறி யத்துணிந்த
நாரணனுன்முக னுக்கரியானடு வாய்நிறைந்த
பூரணனெந்தை புகலிப்பிரான் பொழிலத்தனைக்குங்
காரணனந்தக் கரணங்கடந்த கருப்பொருளே. (ங)

(இணைக்குறளாசிரியப்பா.)

கருமுதற்றொடங்கிப் பெருநாளெல்லாம்
காமம்வெகுளி கழிபெரும்பொய்யெனும்
தூய்மையில்குப்பை தொலைவின்றிக்கிடந்ததை
அரிதினிகழ்ந்து போக்கிப்பொருதிறன்
மையிருணிறத்து மதமுடையடுசினத்
தைவகைக்கடாவும் யாப்பவிழ்த்தகற்றி
அன்புகொடுமெழுகி யருள்விளக்கேற்றித்
துன்பவிருளைத் துறந்துமுன்புற
மெய்யெனும்விதானம் விரித்துநொய்ய
கீழ்மையிற்றொடர்ந்து கிடந்தவென்சிந்தைப்
பாழறையுனக்குப் பள்ளியறையாக்கிச்
சிந்தைத்தாமரைச் செழுமலர்ப்பூந்தவி
செந்தைநீயிருக்க விட்டனனிந்த
நெடுநிலவளாகமு மடுகதிர்வானமும்
அடையப்பரந்த வாதிவெள்ளத்து
நுரையெனச்சிதறி யிருசுடர்மிதப்ப
வரைபறித்தியங்கு மாருதங்கடுப்ப
மாலும்பிரமனு முதலியவானவர்
காலமிதுவெனக் கலங்காநின்றுழி
மற்றவருய்யப் பற்றியபுணையாய்
மிகநனிமிதந்த புகலிநாயக
அருணனிசுரக்கும் பிரளயவிடங்கநின்
செல்வச்சிலம்பு மெல்லெனமிழற்ற
அமையாக்காட்சி யிமயக்
கொழுந்தையுமுடனே கொண்டிங்
கெழுந்தருளத்தகு மெம்பெருமானே. (ச)

வெண்பா.

மானுமழுவுந் திருமிடற்றில் வாழுமிரு
டானும்பிறையுமே தாங்கிநிற்கும்—வானவர்க்கு
வெள்ளத்தேதோன்றிக் கழுமலத்தேவீற்றிருந்தென்
உள்ளத்தேநின்ற வொளி. (௫)

கட்டளைக்கலித்துறை.

ஒளிவந்தவாபொய்மனத்திருணீங்கவென்னுள்ளவெள்ளம்
தெளிவந்தவாவந்துதித்தித்தவாசிந்தியாததொரு
களிவந்தவாவன்புகைவந்தவாகடைசாரமையத்
தெளிவந்தவாநங்கழுமலவாணர்தம்மின்னருளே. (௬)

இணைக்குறளாசிரியப்பா.

அருள்பழுத்தளிந்த கருணைவான்கனி
ஆராவின்பத் தீராக்காதல்
அடியவர்க்கமிர்த வாரிநெடுநிலை
மாடக்கோபுரத் தாடகக்குடுமி
மழைவயிறுகிழிக்குங் கழுமலவாணநின்
வழுவாக்காட்சி முதிராவிளமுலைப்
பாவையுடனிருந்த பரமயோகி
யானென்றுணர்த்துவ னெந்தைமேனாள்
அகிலலோகமு மனந்தயோனியும்
நிகிலமுந்தோன்ற நீநினைந்தநாடொட்டு
எனைப்பலயோனியு நினைப்பரும்பேதத்
தியாரும்யாவையு மெனக்குத்தனித்தனித்
தாயராகியுந் தந்தையராகியும்
வந்திலாதவ ரில்லையானவர்
தந்தையராகியுந் தாயாராகியும்
வந்திராதது மில்லைமுந்து
பிறவாநிலனு மில்லையவ்வயின்
இறவாநிலனு மில்லைபிறிதில்
எனைத்தினுவுயிர்களு மில்லையானவை
தமைத்தினுதொழிந்தது மில்லையனைத்தே
காலமுஞ்சென்ற தியானிதன்மேலினி
இளைக்குமா றிலனேநாயேன்
அந்தரச்சோதிநின் னஞ்செழுத்துநவிலும்
தந்திரம்பயின்றது மிலனேதந்திரம்
பயின்றவர்ப்பயின்றது மிலனேயாயினும்
இயன்றதோர்பொழுதி னிட்டுமலராச்
சொன்னதுமந்திர மாகவென்னையும்

இடர்ப்பிறப்பிறப்பெனு மிரண்டின்
கடற்படாவகை காத்தனின்கடனே. (எ)

வெண்பா.

கடலானகாமத்தே காருழ்வர் துன்பம்
அடலாருபாயமறியார் - உடலாம்
முழுமலத்தையோர்கிலார் முக்கட்பெருமான்
கழுமலத்தைக் கைதொழாதார். (அ)

கட்டளைக்கலித்துறை.

தொழுவாளிவள்வளைதோற்பாளிவளிடர்க்சேயலர்கொண்
டெழுவாளெழுகின்றதென்செயவோவென்மனத்திருந்துங்
கழுவாமணியைக்கழுமலவாணனைக்கையினிற்கொள்
மழுவாளனைக்கண்டுவந்ததென்றுலொர்வசையில்லையே. (கூ)

இணைக்குறளாசிரியப்பா.

வசையில்காட்சி யிசைநனிவிளங்க
முன்னுணிகழ்ந்த பன்னீருகத்து
வேறுவேறுபெயரி னூறின்றியன்ற
மையறுசிறப்பிற் றெய்வத்தன்மைப்
புகலிநாயக விகல்விடைப்பாக
அமைநாண்மென்றோ ளுமையாள்கொழுந
குன்றுகுனிவித்து வன்றோளவுணர்
மூவெயிலெரித்த சேவகத்தேவ
இளநிலாமுகிழ்க்கும் வளர்சடைக்கடவுணின்
நெற்றியிற்சிறந்த வொற்றைநாட்டத்துக்
காமனைவிழித்த மாமுதுதலைவ
வானவரறியா வாதியானே
* கல்லாவுளத்திற் புல்லறிவுதொடர
மறந்துநோக்கும் வெறுந்தண்ணுட்டத்துக்
காண்டொறுங்காண்டொறு மெல்லாம்யாண்டை
யாயினும்பிறவு மென்னதும்பிறரதும்
ஆவனபலவு மழிவனப்லவும்
போவதும்வருவது நிகழ்வதுமாகித்
தெண்ணீர்ஞாலத்துத் திரண்டமணலினும்
எண்ணில்கோடி யெனைப்பலவாகி
இல்லனவுளவா யுள்ளனகாணுப்
பன்னளிருள்வயிற் பட்டேனன்னதும்
அன்னதாதலி னடுக்குமதென்னெனின்
கட்புலன்றெரியாது கொட்புறுமொருவற்குக்
குழிவழியாகி வழிகுழியாகி

* சடமாகிய வுடம்பெனக்கொண்டு, கல்லாவுடம்பெனவும் பாடமோதுவர்.

ஒழிவின்றொன்றி னொன்றுதடுமாறி
வந்தாற்போல வந்ததெந்தைநின்
திருவளர்நாட்டக் கருணையிற்பெறலும்
யாவையுமெனக்குப் பொய்யெனத்தோன்றி
மேவருநீயே மெய்யெனத்தோன்றினை
ஓவியப்புலவன் சாயல்பெறவெழுதிய
சிற்பவிகற்ப மெல்லாமொன்றில்
தவிராதுதடவினர் தமக்குச்
சுவராய்த்தோன்றுந் துணிவுபோன்றனவே. (க0)

வெண்பா.

எனவேயெழுந்தாளென் செய்கிற்பாளின்னம்
சினவேறுகாட்டு திரொன்னு - மினவேகப்
பாம்புகலியாகிமிரும் பன்னுச்சடைமுடிநம்
பூம்புகலியானிதழிப் போது. (கக)

கட்டளைக்கலித்துறை.

போதும்பெறாவிடிற்பச்சிலையுண்டுபுனலுண்டெங்கும்
ஏதும்பெறாவிடினெஞ்சுண்டின்றேயிணையாகச்செப்பும்
சூதும்பெறுமுலைப்பங்கர்தென்றோணிபுரேசர்வண்டின்
தாதும்பெறாதவடித்தாமரைசென்றுசார்வதற்கே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

திருக்கழுமல மும்மணிக்கோவை

முற்றிற்று.

உ

கணபதி துணை.

கூ-வது திருவிடைமருதூர்

# மும்மணிக்கோவை.

திருச்சிற்றம்பலம்.

இணைக்குறளாசிரியப்பா.

தெய்வத் தாமரைச் செவ்வியின் மலர்ந்து
வாடாப் புதுமலர்த் தோடெனச் சிவந்து
சிலம்புங் கழலு மலம்பப் புனைந்து
கூற்றி னாற்றன் மாற்றிப் போற்றாது
வலம்புரி நெடுமா லேனமாய் நிலம்புக்
காற்றலி னகழத் தோற்றாது நிமிர்ந்து
பத்தி யடியவர் பச்சிலை யிடினு
முத்தி கொடுத்து முன்னின் றருளித்
திகழ்ந்துள தொருபாற் றிருவடி யகஞ்சேர்ந்து
மறுவில் கற்பகத் துறுதளிர் வாங்கி
நெய்யிற் றோய்த்த செவ்வித் தாகி
நூபுரங் கிடப்பினு நொந்து தேவர்
மடவரன் மகளிர் வணங்குபு வீழ்த்த
சின்னப் பன்மலர் தீண்டிடச் சிவந்து
பஞ்சியு மனிச்சமு மெஞ்ச வெஞ்சாத்
திருவொடும் பொலியு மொருபாற் றிருவடி
நீலப் புள்ளி வாளுகிர் வேங்கைத்
தோலின் கலிங்க மேல்விரித் தசைத்து
நச்செயிற் றரவக் கச்சையாப் புறத்துப்
பொலிந்துள தொருபாற் றிருவிடை யிலங்கொளி
யரத்த வாடை விரித்து மீதுறீஇ
யிரங்குமணி மேகலை யொருங்குடன் சாத்திய
மருங்கிற் றாகு மொருபாற்றிருவிடை
செங்க ணரவும் பைங்க ணாமையுங்
கேழற் கோடும் வீழ்திர ளக்கு
நுடங்கு நூலு மிடங்கொண்டு புனைந்து
தவளநீ றணிந்ததோர் பவளவெற் பென்ன
வொளியுடன் றிகழு மொருபா லாகம்
வாரும் வடமு மேர்பெறப் புனைந்து
செஞ்சாந் தணிந்து குங்கும மெழுதிப்
பொற்றா மரையின் முற்றா முகிழெனு
வுலகே ழீன்று நிலையிற் றளரா

முலையுடன் பொலியு மொருபா லாக
மயில்வா யரவம் வயின்வயி னணிந்து
மூவிலை வேலும் பூவாய் மழுவுந்
தமருகப் பறையு * மமர்தரத் தாங்கிச்
சிறந்துள தொருபாற் றிருக்காஞ் செறிந்த
சூடகம் விளங்கிய வாடகச் சழங்குட
ணெம்மென் பந்து மம்மென் கிள்ளையுந்
தரித்தே திகழு மொருபாற் றிருக்கா
மிரவியு மெரியும் விரவிய வெம்மையி
னொருபால் விளங்குந் திருநெடு நாட்ட
நவ்வி மானின் செவ்வித் தாகிப்
பாலிற் கிடந்த நீலம் போன்று
குண்டு நீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம்பயின்
றெம்மனோர்க் கடுத்த † மம்மர்க் கிரங்கி
யுலகேழ் புரக்கு மொருபா னாட்ட
நொச்சிப் பூவும் பச்சை மத்தமுங்
கொன்றைப் போது மென்றுணர்த் தும்பையுங்
கங்கை யாறும் பைங்கட் டலையு
மரவு மதியமும் விரவித் தொடுத்துச்
சூடா மாலை சூடிப் பீடுகெழு
நெருப்பிற் றிரித்தனைய வுருக்கிளர் சடிலமொடு
நான்முகங் கரந்த பானிற வன்னங்
காணா வண்ணங் கருத்தையுங் கடந்து
சேணிகந் துளதே யொருபாற் றிருமுடி
பேணிய
கடவுட் கற்பின் மடவரன் மகளிர்
கற்பக வனத்துப் பொற்பூ வாங்கிக்
கைவைத்துப் புனைந்த தெய்வமாலை
நீலக் குழன்மிசை வளைஇ மேனிவந்து
வண்டுந் தேனுங் கிண்டுபு திளைப்பத்
திருவுடன் பொலியு மொருபாற் றிருமுடி
யினைய வண்ணத்து நினைவருங் காட்சி
யிருவயி னுருவு மொரு வயிற் றாகி
வலப்பா னாட்ட மிடப்பா னோக்க
வாணுதல் பாக நாணுதல் செய்ய
வலப்பாற் றிருக்கா மிடப்பால் வனமுலை
தைவந்து வருட மெய்ம்மயிர் பொடித்தாங்
குலக மேழும் பன்முறை யீன்று

---

* இனையனதாங்கி எனவும்பாடம். † வெம்மைநோய்க்கிரங்கி எனவும்பாடம்.

மருதிடங் கொண்ட வொருதனிக் கடவுணின்
றிருவடி பரவுதும் யாமே நெடுநா
ளிறந்தும் பிறந்து மிளைத்தன மறந்துஞ்
சிறைக்கருப் பாசயஞ் சேரா
மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே, (௧)

நேரிசைவெண்பா.

பொருளுங் குலனும் புகழுந் திறனு
மருளு மறிவு மனைத்து-மொருவர்
கருதாவென் பார்க்குங் கறைமிடற்றாய் தொல்லை
மருதாவென் பார்க்கு வரும். (௨)

கட்டளைக்கலித்துறை.

வருந்தே னிறந்தும் பிறந்து மயக்கும் புலன் வழிபோய்ப்
பொருந்தே னரகிற் புகுகின்றி லேன்புகழ் மாமருதிற்
பெருந்தேன் முகந்துகொண் டுண்டு பிறிதொன்றி லாசையின்றி
யிருந்தே னினிச்சென் றிரவே னொருவரை யாதொன்றுமே. (௩)

நேரிசையாசிரியப்பா.

ஒன்றினொ டொன்று சென்றுமுகி றடவி
யாடுகொடி நுடங்கும் பீடுகெழு மாளிகை
தெய்வக் கம்மியர் கைம்முயன்று வகுத்த
வோவநூற் செம்மைப் பூவியல்வீதி
குயிலென மொழியு மயிலியற் சாயன்
மான்மாற விழிக்கு மானூர் செல்வத்
திடைமரு திடங்கொண் டிருந்த வெந்தை
சுடர்மழு வலங்கொண் டிருந்த தோன்ற
லாரணந் தொடராப் பூரண புராண
நாரண னறியாக் காரணக் கடவுள்
சோதிச் சுடரொளி யாதித் தனிப்பொரு
ளேக நாயக யோக நாயக
யானொன் றுணர்த்துவ துளதே யான்முன்
னனந்தலை யுலகத் தனந்த யோனியிற்
பிறந்துழிப் பிறவாது கறங்கெனச் சுழன்றுழீஇத்
தோற்றும் பொழுதி னீற்றுத் துன்பத்
தியாயுறு துயரமு மியானுறு துயரமு
மிறக்கும் பொழுதி னறப்பெருந் துன்பமு
நீயல தறிகுநர் யாரோ யதனால்
யா னினிப் பிறத்த லாற்றே னஃதான்
றுற்பவந் துடைத்த னிற்பிடித் தல்லது
பிறிதொரு நெறியி னில்லையந் நெறிக்கு

வேண்டலும் வெறுத்தலு மாண்டொன்றிற் படரா
வுள்ளமொன் றுடைமை வேண்டு மஃதன்றி
யைம்புல னேவ லாணைவழி நின்று
தானல தொன்றைத் தானென் னினையு
மிதுவென துள்ள மாதலி னிதுகொடு
நின்னை நினைப்ப தெங்ஙன முன்னங்
கற்புணை யாகக் கடனீர் நீந்தின
ரெற்பிற ருளரோ விறைவ கற்பங்
கடத்தல் யான் பெறவும் வேண்டுங் கடத்தற்கு
நினைத்தல் யான்பெறவும் வேண்டு நினைத்தற்கு
நெஞ்சுநெறி நிற்கவும் வேண்டு நஞ்சுபொதி
யுறையெயிற் றுரகம் பூண்ட
கறைகெழு மிடற்றெங் கண்ணுதலோயே. (௪)

நேரிசைவெண்பா.

கண்ணென்று நந்தமக்கோர் காப்பென்றுங் கற்றிருக்கு
மெண்ணென்று மூல வெழுத்தென்று—மொண்ணே
மருதவப்பா வென்றுமுனே வாழ்த்தாரோன் மற்றுங்
கருதவப்பா லுண்டோ கதி. (௫)

கட்டளைக்கலித்துறை.

கதியா வதுபிறி தியாதொன்று மில்லைகளே பரத்தின்
பொதியா வதுசுமந் தால்விழப் போமிது போனபின்னர்
விதியா மெனச்சிலர் நோவதல் லாலிதை வேண்டுநர்யார்
மதியா வதுமரு தன்கழ லேசென்று வாழ்த்துவதே. (௬)

இணைக்குறளாசிரியப்பா.

வாழ்ந்தன மென்று தாழ்ந்தவர்க் குதவாது
தன்னுயிர்க் கிரங்கி மன்னுயிர்க்கிரங்கா
துண்டிப் பொருட்டாற் கண்டன வெஃகி
யவியடு நர்க்குச் சுவைபல பகர்ந்தே
யாரா வுண்டி யயின்றன ராகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா
விழுப்பமுங் குலனு மொழுக்கமுங் கல்வியுந்
தன்னிற் சிறந்த நன்மூ தாளரைக்
கூஉய்முன் னின்றுதன் னேவல் கேட்குஞ்
சிறாஅர்த் தொகுதியி னுறாஅப் பேசியும்
பொய்யோடு புன்மைதன் புல்லர்க்குப் புகன்று
மெய்யு மானமு மேன்மையு மொரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
நன்மனைக் கிழத்தி யாகிய வந்நிலைச்

சாவுழிச் சாஅந் தகைய ளாயினு
மேவுழி மேவல் செல்லாது காவலொடு
கொண்டோ ளொருத்தி யுண்டிவேட் டிருப்ப
வெள்ளுக் கெண்ணைபோ லத்தள் ளாது
பொருளி னளவைக்குப் போகம்விற் றுண்ணு
மருளின் மடந்தைய ராகந் தோய்ந்து
மாற்றல் செல்லாது வேற்றோர் மனைவயிற்
கற்புடை மடந்தையர் பொற்பு நனி கேட்டுப்
பிழைவழி பாராது நுழைவழி நோக்கியு
நச்சி வந்த நல்கூர் மாந்தர் தம்
விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியி
னகமலர்ந் தீவார் போல முகமலர்ந்
தினிது மொழிந்தாங் குதவுத லின்றி
நாளு நாளு * நாள்பல கழித்தவர்
தாளி னூற்றலுந் தவிர்த்துத் கேளிகழ்ந்
திகழும் பரமு மில்லை யென்று
பயமின் றொழுகிப் பட்டிமை பயிற்றி
மின்னி னனையதன் செல்வத்தை விரும்பித்
தன்னையு மொருவ ராக வுன்னு
மேனையோர் வாழ்வும் வாழ்க்கையு நனைமலர்ந்
தியோசனை கமழு முற்பல வாவியிற்
பாசடைப் பரப்பிற் பானிற வன்னம்
பார்ப்புடன் வெருவப் பகுவாய் வாளைகள்
போர்த் தொழில் புரியும் பொருகா விரியு
மருதமுஞ் சூழ்ந்த மருத வாண
சுருதியுந் தொடராச் சுருதி நாயக
பத்தருக் கெய்ப்பில் வைப்பென வுதவு
முத்தித் தாள மூவா முதல்வ நின்
றிருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களு மனைவியு மொக்கலுந் திருவும்
பொருளென நினையாதுன் னரு ளினைநினைந்
திந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கிச்
சின்னச் சீரை துன்னற் கோவண
மறுதற் கிளொடு பெறுவது புனைந்து
† சிதவ லோடொன் றுதவுழி யெடுத்தாங்
கிடுவோ ருளரெனி னிலையினின் றயின்று

* நாள்பல குறித்தவர் என்றும்பாடம். † சிதவல்-பழுதுபட்ட.

படுதரைப் பாயலிற் பள்ளிமேவி
யோவாத் தகவெனு மரிவையைத் தழீஇ
மகவெனப் பல்லுயி ரனைத்தையு மொக்கப்
பார்க்குநின்
செல்வக் கடவுட் டொண்டர் வாழ்வும்
பற்றிப் பார்க்கி னுற்றநா யேற்குக்
குளப்படி நீரு மளப்பருந் தன்மைப்
பிரளயச் சலதியு * மிருவகைப் பொருளு
மொப்பினு மொவ்வாத் துப்பிற் றூதலி
னின்சீ ரடியார் தஞ்சீ ரடியார்க்
கடிமை பூண்டு நெடுநாட் பழகி
முடலை யாக்கையொடு புடைபட் டொழுகியவர்
காற்றலை யேவலென் னுய்த்தலை யேற்றுக்
கண்டது காணி னல்லதொன்
றுண்டோ மற்றெனக் குள்ளது பிறிதே, (எ)

நேரிசைவெண்பா.

பிறிந்தே னரசம் பிறவாத வண்ண
மறிந்தே னனங்கவே ளம்பிற் - செறிந்த
பொருதவட்ட விற்பிழைத்துப் போந்தேன் புராணன்
மருத வட்டந் தன்னுளே வந்து. (அ)

கட்டளைக்கலித்துறை.

வந்திக்கண் டாயடி யாரைக்கண் டான்மற வாதுநெஞ்சே
சிந்திக்கண் டாயரன் செம்பொற் கழறிரு மாமருதைச்
சந்திக்கண் டாயில்லை யாயினமன் றமர் தாங்கொடுபோ
யுந்திக்கண் டாய்நிரை யத்துன்னை வீழ்த்தி யுழக்குவரோ. (கூ)

இணைக்குறளாசிரியப்பா,

உழப்பின் வாரா வுறுதிக ளுளவோ
கழப்பின் வாராக் கையறவுளவோ
அதனால்
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற வகழ்ந்து போக்கித் தூர்வைசெய்
தன்பென் பாத்தி கோலி முன்புற
மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்
பத்தித் தனிவித் திட்டு நித்தலு
மார்வத் தெண்ணீர் பாய்ச்சிநேர் நின்று
தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சியுட்சென்று

* மிருவயிற்பேதமும் எனவும்பாடம்.

சாந்த வேலி கோலி வாய்ந்தபின்
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணை யிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி
மெய்ம்மயிர் புளக முகிழ்த்திட் டம்மெனக்
கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய
வஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்
தோளிரு நான்குஞ் சுடர்முக மைந்தும்
பவளநிறம் பெற்றுத் தவளநீறு பூசி
யறுசுவை யதனினு முறுசுவை யுடைத்தாய்க்
காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி
பையப் பையப் பழுத்துக் கைவர
வெம்மனோர்க ளினிதினி தருந்திச்
செம்மாந் திருப்பச் சிலரிதின் வராது
மனமெனும் புனத்தை வறும் பாழாக்கிக்
காமக்காடுமூடித் தீமைசெய்
யைம்புலவேட ராறலைத்தொழுக
வின்பப் பேய்த்தே ரொட்டா தோடக்
கல்லா வுணர்வெனும் புல்வா யலமர
விச்சைவித் துதிர்த்துழி யானெனப் பெயரிய
நச்சு மாமர நனிமிக முளைத்துப்
பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்
பாவப் பஃறழை பரப்பிப் பூவெனக்
கொடுமை யரும்பிக் கடுமை மலர்ந்து
துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு
மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து
தமக்கும் பிறர்க்கு முதவா
திமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே. (க0)

நேரிசைவெண்பா.

உடைமணியி னோசைக் கொதுங்கி யரவம்
படமொடுங்கப் பையவே சென்றங் - கிடைமருத
னையம் புகுவ தணியிழையார் மேலனங்கன்
கையம் புக வேண்டிக் காண். (கக)

### கட்டளைக்கலித்துறை.

காணீர் கதியொன்றுங் கல்லீரெழுத்தஞ்சும் வல்லவண்ணம்
பேணீர் திருப்பணி பேசீரவன்புக ழாசைப்பட்டுப்
பூணீ ருருத்திர சாதனநீறெங்கும் பூசுகிலீர்
வீணீ ரெளிதோ மருதப்பிரான்கழன் மேவுதற்கே. (கஉ)

### இணைக்குறளாசிரியப்பா.

மேவிய புன்மயிர்த் தொகையோ வம்மயிர்
பாவிய தோலின் பரப்போ தோலிடைப்
புகவிட்டுப் பொதிந்த புண்ணோ புண்ணிடை
யூறு முதிரப் புனலோ கூறுசெய்
திடையிடை நிற்கு மெலும்போ வெலும்பிடை
முடைகெழு மூளை விழுதோ வழுவழுத்
துள்ளிடை யொழுகும் வழும்போ மெள்ளநின்
றூரும் புழுவி னொழுங்கோ நீரிடை
வைத்த மலத்தின் குவையோ வைத்துக்
கட்டிய நரம்பின் கயிறோ வுடம்பிற்குட்
பிரி யாதொறுக்கும் பிணியோ * தெரிதரல்
இன்ன தியானென் றறியே னென்னை
யேதினுந் தேடினன் யாதினுங் காணேன்
முன்னம்
வரைத்தனி வில்லாற் புரத்தையழ லூட்டிக்
கண் படையாகக் காமனை யொருநா
ளுண்பொடி யாக நோக்கியண் டத்து
வீயா வமரர் வீயவந் தெழுந்த
தீவாய் நஞ்சைத் திருவமு தாக்கி
யிருவர் தேடி வெருவர நிமிர்ந்து
பாலனுக் காகக் காலனைக் காய்ந்து
சந்தன சரள சண்பக வகுள
நந்தன வனத்திடை ஞாயிறு வழங்காது
நவமணி முகிழ்த்த புதுவெயி லெறிப்ப
வெண்ணருங் கோடி யிருடிகணங் கட்குப்
புண்ணியம் புரக்கும் பொன்னி சூழ்ந்த
திருவிடை மருத பொருவிடைப் பாக
மங்கை பங்க கங்கைநா யகநின்
றெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப் படலங் கிறித் தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின்

னின்பெருந் தன்மையுங் கண்டேன் காண்டலு
மென்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டே
னின்னிலை யனைத்தினுங் கண்டே னென்னை
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணுத் தன்மை யோரே. (௪௩)

நேரிசைவெண்பா.

ஓராதே யஞ்செழுத்து முன்னுதே பச்சிலையு
நோராதே நீரு நிரப்பாதே - யாராயோ
வெண்ணுவா ருள்ளத் திடைமருதர் பொற்பாத
நண்ணுவா மென்னு மது நாம். (௪௪)

கட்டளைக்கலித்துறை.

நாமே யிடையுள்ள வாறறிவாமினி நாங்கள்சொல்ல
லாமே மருதன் மருதவனத்தன்ன மன்னவரைப்
பூமேலணிந்து பிழைக்கச்செய் தாரொரு பொட்டுமிட்டார்
தாமே தளர்பவ ளைப்பாரமேற்றுத றக்கதன்றே. (௪௫)

நேரிசையாசிரியப்பா.

அன்றினர் புரங்க ளழலிடை யவியக்
குன்றுவளைத் தெய்த குன்றாக் கொற்றவ
துண்பொடி யணிந்த வெண்டோட் செல்வ
கயிலைநடந் தனைய வுயர்நிலை நோன்றாட்
பிறைசெறித் தன்ன விருகோட் டொருதிமிற்
பாணிறச் செங்கண் மால்விடைப் பாக
சிமயச் செங்கோட் டிமயச் செல்வன்
மணியெனப் பெற்ற வணியிய லன்னம்
வெள்ளைச் சிறுநகைக் கிள்ளைப் பிள்ளை
குயிலெனப் பேசு மயிலிளம் பேடை
கதிரொளி நீலங் கமலத்து மலர்ந்தன
மதரரி நெடுங்கண் மானின் கன்று
வருமுலை தாங்குந் திருமார்பு வல்லி
வையக மேழும் பன்முறை யீன்ற
வையை திருவயிற் றம்மை பிராட்டி
மறப்பருஞ் செய்கை யறப்பெருஞ் செல்வி
யெமையா ளுடைய வுமையா ணங்கை
கடவுட் கற்பின் மடவரல் கொழுந
பவள மால்வரைப் பனிக்கைபோந் தனைய
தழைசெவி யெண்டோட் டலைவன் றந்தை
பூவலர் குடுமிச் சேவலம் பதாகை

மலைதுளை படுத்த கொலைகெழு கூர்வே
லமரர்த் தாங்குங் குமரன் றாதை
பொருதிடங் கொண்ட பொன்னி புரக்கு
மருதிடங் கொண்ட மருத வாண
நின்னது குற்ற முளதோ நின்னினைந்
தெண்ணருங் கோடி யிடர்ப்பகை களைந்து
கண்ணுறு சீற்றத்துக் காலனை வதையா
விறப்பையும் பிறப்பையு மிகழ்ந்து சிறப்பொடு
தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவிக டமதே பாவம் யாதெனின்
முறியாப் புழுக்கன் முப்பழங் கலந்த
வறுசுவை யடிசி லட்டினி திருப்பப்
புசியா தொருவன் பசியால் வருந்துத
லயினியின் குற்ற மன்று வெயிலின்வைத்
தாற்றிய தெண்ணீர் நாற்றமிட் டிருப்ப
மடாஅ வொருவன் விடாஅ வேட்கை
தெண்ணீர்க் குற்ற மன்று கண்ணகன்று
தேன்றுளி சிதறிப் பூந்துணர் துறுமி
வானுகங் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலிற் புள்ளிவெயர் பொடிப்ப
வடிபெயர்த் திடுவா னொருவ
னெடிது வருந்துத னிழற்றீங் கன்றே. (கசு)

நேரிசைவெண்பா.

அன்றென்று மாமென்று மாறுசம யங்க
ளொன்றென்றொன் றொவ்வா துரைத்தாலு - மென்று
மொருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கு
மருதனையே நோக்கி வரும். (கஎ)

கட்டளைக்கலித்துறை.

நோக்கிற்றுக் காம னுடல்பொடியாக நுதிவிரலாற்
றாக்கிற்றரக்கன் றலைகீழ்ப் படத்தன் சுடர்வடிவா
ளோக்கிற்றுத்தக்கன் றலையுருண் டோடச் சலந்தரனைப்
போக்கிற்றுயிர்பொன்னி சூழ்மருதாளுடைப் புண்ணியமே.

நேரிசையாசிரியப்பா.

புண்ணிய புராதன புதுப்பூங் கொன்றைக்
கண்ணிவேய்ந்த கைலை நாயக
காளகண்ட கந்தனைப் பயந்த
வாளரி நெடுங்கண் மலையாள் கொழுந

பூத நாத பொருவிடைப் பாக
வேத கீத விண்ணோர் தலைவ
முத்தி நாயக மூவா முதல்வ
பத்தி யாகிப் பணைத்தமெய் யன்பொடு
நொச்சி யாயினுங் கரந்தை யாயினும்
பச்சிலை யிட்டுப் பரவுந் தொண்டர்
கருவிடைப் புகாமற் காத்தருள் புரியுந்
திருவிடை மருத திரிபு ராந்தக
மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கண்
மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ
மனையும் பிறவுந் துறந்து நினைவருங்
காடு மலையும் புக்குக் கோடையிற்
கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி
யைவகை நெருப்பி னழுவத்து நின்று
மாரி நாளிலும் வார்பனி நாளினு
நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்து
முடையைத் துறந்து முண்ணா துழன்றுங்
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும்
வாயுவு நீரும் வந்தன வருந்தியுங்
களரிலுங் கல்லிலுங் கண்படைகொண்டுந்
தளர்வுறு மியாக்கையைத் தளர்வித் தாங்கவ
ரம்மை முத்தி யடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவு மொறுப்ப
ரீங்கிவை செய்யா தியாங்க ளெல்லாம்
பழுதின் றுயர்ந்த வெழுநிலை மாடத்துஞ்
செந்தா துதிர்ந்த நந்தா வனத்துந்
தென்ற லியங்கு முன்றி லகத்துந்
தாண்டாச் சித்திர மண்டப மருங்கிலும்
பூவிரி தரங்க வாவிக் கரையினு
மயிற் பெடையாலக் குயிற்றிய குன்றிலும்
வேண்டுழி வேண்டுழி யாண்டாண டிட்ட
மருப்பி னியன்ற வாளரி சுமந்த
விருப்புறு கட்டின் மீமிசைப் படுத்த
வைவகை யமளி யணைமேற் பொங்கத்
தண்மலர் கமழும் வெண்மடி விரித்துப்
பட்டினுட் பெய்த பதநுண் பஞ்சி
னெட்டணை யருகாக் கொட்டைகள் பரப்பிப்

பாயன் மீது பரிபுர மிழற்றச்
சாயல னன்னத்தின் றளர்நடை பயிற்றிப்
பொற்றோ ரணத்தைச் சுற்றிய துகிலென
வம்மென் குறங்கி னம்மென் கலிங்கங்
கண்ணு மனமுங் கவற்றிப் பண்வர
விரங்குமணி மேகலை யொருங்குடன் கிடந்த
வாடர வல்கு லரும்பெற னுசுப்பு
வாட வீங்கிய வனமுலை கதிப்ப
வணியியல் கமுகை யலங்கரித் ததுபோன்
மணிபிய லாரங் கதிர்விரித் தொளிர்தர
மணிவளை தாங்கு மணிகெழு மென்றோள்
விரித்த சாந்தின் மிசைவிரித் திட்ட
வுத்தரி யப்பட் டொருபா லொளிதர
வள்ளை வாட்டிய வொள்ளிரு காதொடு
பவளத் தருகாத் தரள நிரைத்தாங்
கொழுகி நீண்ட குமிழொன்று பதித்துக்
காலன் வேலுங் காம பாணமு
மால காலமு மனைத்துமிட் டமைத்த
விரண்டு நாட்டமும் புரண்டுகடை மிளிர்தர
மதியென மாசறு வதனம் விளங்கப்
புதுவிரை யலங்கல் குழன்மிசைப் பொலியு
மஞ்சொன் மடந்தைய ராகந் தோய்ந்துஞ்
சின்னம் பரப்பிய பொன்னின் கலத்து
மறுசுவை யடிசில்வறிதிருந் தருந்தா
தாடினர்க் கென்றும் பாடினர்க் கென்றும்
வாடினர்க் கென்றும் வரையாது கொடுத்தும்
பூசுவன பூசியும் புனைவன புனைந்துந்
தூசி னல்லன தொடையிற் சேர்த்தியு
மைந்து புலன்களு மார வார்ந்து
மைந்தரு மொக்கலு மனமகிழ்ந் தோங்கி
யிவ்வகை யிருந்தோ மாயினு மவ்வகை
மந்திரவெழுத் தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலி னந்த
முத்தியு மிழந்தில முதல்வவத்திற
நின்னது பெருமை யன்றோ வென்னின்
வல்லா னொருவன் கைம்முயன் றெறியினு
மாட்டா வொருவன் வாளா வெறியினு
நிலத்தின் வழாஅக் கல்லே போ
னலத்தின் வழார்நின் னாமநவின் றோரே. (கசு)

நேரிசைவெண்பா.

நாமநவிற் றுய்மனனே நாரியர்கடோ டோய்ந்து
காமநவிற்றிக் கழிந் தொழிய - லாமோ
பொருத வனத்தானையுரி போர்த்தருளு மெங்கண்
மருத வனத் தானை வளைந்து. (உ0)

கட்டளைக்கலித்துறை

வளையார்பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார்தனங்கண் டிரங்கில் லாரிப் பிறப்பினில்வந்
தளையார்நரகினுக் கென்கடவார்பொன் னலர்ந்தகொன்றைத்
தளையானிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே. (உக)

அடிசார்ந் தவர்க்கு முடியா வின்ப
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வ
மூலமு நடுவு முடிவு மின்றிக்
கால மூன்றுங் கடந்த கடவு
ளுளக்கணுக் கல்லா தூன் கணுக்கொளித்துத்
துளக்கற நிமிர்ந்த சோதிச் சுடரொளி
யெறுப்புத் துளையி னிருசெவிக் கெட்டா
துறுப்பினின் றெழுதரு முள்ளத் தோசை
வைத்த நாவின் வழிமறித் தகத்தே
தித்தித் தூறுந் தெய்வத் தேற
லுண்டத் துளையிற் பண்டைவழி யன்றி
யறிவி னூறு நறிய நாற்ற
மேனைய தன்மையு மெய்தா தெவற்றையுந்
தானே யாகி நின்ற * தற்பர
தோற்றுவ தெல்லாந் தன்னிடைத் தோற்றித்
தோற்றம் பிறிதிற் றேற்றுச் சுடர்முளை
விரிசடை மீமிசை வெண்மதி கிடப்பினு
மிருள்விரி கண்டத் தேக நாயக
சுருதியு மிருவருந் தொடர்ந்து நின்றலமர
மருதிடங் கொண்ட மருத மாணிக்க
வுமையாள் கொழுந வொருமூன் றாகிய
விமையா நாட்டத் தென்றனி நாயக
வடியே னுறுகுறை முனியாது கேண்மதி
நின்னடி பணியாக் கன்மனக்கயவ ரொடு
நெடுநாட் பழகிய கொடுவினை யீர்ப்பக்
கருப்பா சயமெனு மிருட்சிறை யறையிற்
குடரொன் சங்கிலி பூண்டு தொடர்ப் பட்டுக்

* தத்துவ என்றும் பாடம்.

கூட்டுச்சிறைப் புழுவி னீட்டுமலத்தழுந்தி
யுடனே வருந்தி நெடுநாட்கிடந்து
பல்பிணிப் பெயர்பெற் றல்லற் படுத்துந்
தண்டனுளர் பிண்டி வந் தலைப்ப
வுதரநெருப்பிற் பதை பதை பதைத்தும்
வாதமத் திகையின் மோதமொத் துண்டுங்
கிடத்த னிற்ற னடத்தல் செல்லா
திடங்குறை வாயிலின் முடங்கி யிருந்துழிப்
பாவப் பகுதியி லிட்டுக் காவற்
கொடியோ னைவனை யேவி நெடிய
வாசைத் தளையி லென்னையு முடலையும்
பாசப் படுத்திப் பையென விட்டபின்
யானும் போந்து தீதினுக் குழன்றும்
பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வெளவியும்
*பரியா தொழிந்தும் பல்லுயிர் செகுத்தும்
வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்
பொய்பல கூறியும் புல்லினம் புல்லியு
மைவருங் கடுப்ப வவாவது கூட்டி
யீண்டின கொண்டு மீண்டு வந்துழி
யிட்டுழி யிடாது பட்டுழிப் படாஅ
தின்னா ளிடுக்க ணெய்திப் பன்னாள்
வாடுபு கிடப்பேன் வீடு நெறிகாணே
னின்னை யடைந்த வடியா ரடியார்க்
கென்னையு மடிமை யாகக் கொண்டே
யிட்ட பச்சிலைகொண் டொட்டி யறிவித்
திச்சிறை பிழைப்பித் தினிச்சிறை புகாமற்
காத்தருள் செய்ய வேண்டுந்
தீத்திரண் டன்ன செஞ்சடையோனே. (௨௨)

நேரிசைவெண்பா.

சடைமே லொருத்தி சமைந்திருப்ப மேனிப்
புடைமே லொருத்தி பொலிய - ‡ விடையேபோய்
சங்கே கலையே மருதற்குத் தான்கொடுப்ப
தெங்கே யிருக்க விவள். (௨௩

கட்டளைக்கலித்துறை.

இருக்கு மருதினுக் குள்ளிமையோர்களு நான்மறையு
நெருக்கு நெருக்கத்து நீளகத்துச்சென்று மீளவொட்டாத்

* பசியாலுழன்றும் என்றும் பாடம். ‡ இடைபுக்கு என்றும் பாடம்.

திருக்குமறுத்தைவர் திமையுந் தீர்த்துச்செவ் வேமனத்தை
யொருக்குமொருக்கத்தி னுள்ளே முளைக்கின்ற வொண்சுடரே. ()

நேரிசையாசிரியப்பா.

சுடர்விடு சூலப் படையினை யென்றும்
விடையுகந் தேறிய விமல வென்று
முண்ணு நஞ்ச முண்டனை யென்றுங்
கண்ணுற்காமனைக்காய்ந்தனையென்றுந்
திரிபுர மெரித்த சேவக வென்றுங்
கரியுரி போர்த்த கடவு ளென்று
முரகம் பூண்ட வுரவோ யென்றுஞ்
சிரகஞ் செந்தழ லேந்தினை யென்றும்
வலந்தரு காலனை வதைத்தனை யென்றுஞ்
சலந்தர னுடலந் தடிந்தனை யென்று
மயன்சிர மொருநா ளரிந்தனை யென்றும்
வியந்தவ ளரக்கனை மிதித்தனை யென்றுந்
தக்கன் வேள்வி தகர்த்தனை யென்று
முக்கிரப் புலியுரி யுடுத்தனை யென்று
மேனமு மன்னமு மெட்டா தலமா
வானங் கீழ்ப்பட வளர்ந்தனை யென்றுஞ்
செழுநீர் ஞாலஞ் செகுத்துயி ருண்ணு
மழல்விழிக் குறளை யமுக்கினை யென்று
மினையன வினையன வெண்ணில் கோடி
நினைவருங் கீர்த்தி நின்வயிற் புகழ்த
றுளக்குறு சிந்தையேன் சொல்லள வாதலி
னளப்பரும் பெருமைநின் னளவல தாயினு
† மொன்றி னேயாப் புன்மொழி கொண்டு
நின்னை நோக்குவ னுதலி னென்னை
யிடுக்கண் களையா வல்லற் படுத்தா
தெழுநிலை மாடத்துச் செழுமுகி லுறங்க
வடித்துத்தட்டி யெழுப்புவ போல
நுண்டுகிற் பதாகை கொண்டுகொண் டுகைப்பத்
துயிலி னீங்கிப் பயிலும் வீதித்
திருமரு தமர்ந்த தெய்வச் செழுஞ்சுட
ரருள்சுரந் தளிக்கு மற்புதக் கூத்த
கல்லா னெறிந்த பொல்லாப் புத்த
னின் னினைந் தெறிந்த வதனா
லன்னவன் றனக்கு மருள்பிழைத் தின்றே. (௨௫)

§ என்றன்வாயிற் புன்மொழி என்றும் பாடம்.

உடைகோவணமுண்டுறங்கப்புறந்திண்ணையுண்டுணவிங்
கடைகாயிலையுண்டருந்தத்தண்ணீருண்டருந்துணைக்கே
விடையேறுமீசர்திருநாமமுண்டிந்தமேதினியில்
வடகோடுயர்ந்தென்னதென்கோடுசாய்ந்தென்னவான்பிறைக்கே.

வீடுநமக்குத்திருவாலங்காடுவிமலர்தந்த
வோடுநமக்குண்டுவற்றாதபாத்திரமோங்குசெல்வ
நாடுநமக்குண்டுகேட்டதெல்லாந்தரநன்னெஞ்சமே
யீடுநமக்குச்சொலவேயொருவருமிங்கில்லையே. (உ)

நாடிக்கொண்டீசரைநாட்டமுற்றாயிலைநாதரடி
தேடிக்கொண்டாடித்தெளிந்தாயிலைசெகமாயைவந்து
மூடிக்கொண்டோமென்றுங்காமாயுதங்கண்முனிந்தவென்றும்
பீடிப்பையோநெஞ்சமேயுனைப்போலிலைப்பித்தர்களே. (ங)

கையொன்றுசெய்யவிழியொன்றுநாடக்கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்றுவஞ்சகநாவொன்றுபேசப்புலால்கமழு
மெய்யொன்றுசாரச்செவியொன்றுகேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசையெவ்வாறுகொள்வாய்வினைதீர்த்தவனே. (ச)

கண்ணுண்டுகாணக் கருத்துண்டு நோக்கக்கசிந்துருகிப்
பண்ணுண்டுபாடச்செவியுண்டு கேட்கப் பல்பச்சிலையா
லெண்ணுண்டுசாத்த வெதிர்நிற்க வீசனிருக்கையிலே
மண்ணுண்டுபோகுதையோ கெடுவீரிந்த மானிடமே. (௫)

சொல்லிலுஞ்சொல்லின்முடிவிலும்வேதச்சுருதியிலு
மல்லிலுமாசற்றவாகாயந்தன்னிலுமாய்ந்துவிட்டோ
ரில்லிலுமன்பரிடத்திலுமீசனிருக்குமிடங்
கல்லிலுஞ்செம்பிலுமோவிருப்பானெங்கள்கண்ணுதலே. (சு)

வினைப்போகமேயொருதேகங்கண்டாய்வினைதானொழிந்தாற்
றினைப்போதளவுநில்லாதுகண்டாய்சிவன்பாதநினை
நினைப்போரைமேவுநினையாரைநீங்கிநெறியினின்று
னுனைப்போலொருவருண்டோமனமேயெனக்குற்றவரோ. (எ)

பட்டைக்கிழித்துப்பருவூசிதன்னைப்பரிந்தெடுத்து
முட்டச்சுருட்டியென்மொய்குழலாள்கைபின்முன்கொடுத்துக்
கட்டியிருந்தகனமாயக்காரிதன்காமமெல்லாம்
விட்டுப்பிரியவென்றோவிங்ஙனேசிவன்மீண்டதுவே. (அ)

சூதுற்றகொங்கையும்மாணார்கலவியுஞ்சூழ்பொருளும்
போதுற்றபூசலுக்கென்செயலாஞ்செய்தபுண்ணியத்தால்
தீதற்றமன்னவன்சிந்தையினின்றுதெளிவதற்கோ
காதற்றவூசியைத்தந்துவிட்டானென்றன்கைதனிலே. (௯)

வாதுற்றதிண்புயரண்ணாமலையர்மலர்ப்பதத்தைப்
போதுற்றெப்போதும்புகலுநெஞ்சேயிந்தப்பூதலத்திற்
றீதுற்றசெல்வமென்றேடிப்புதைத்ததிரவியமென்
காதற்றவூசியும்வாராதுகாணுங்கடைவழிக்கே. (௧௦)

வேதத்தினுட்பொருண் மண்ணாசை மங்கையைவிட்டுவிடப்
போதித்தவன்மொழி கேட்டிலையோ செய்தபுண்ணியத்தா
லாதித்தன்சந்திரன்போலே வெளிச்சமதாம்பொழுது
காதற்றவூசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே. (௧௧)

மனையாளுமக்களும் வாழ்வுந் தனமுந் தன்வாசன் மட்டே.
யினமானசுற்றமயானமட்டேவழிக்கேதுதுணை
தினையாமளவெள்ளளவாகினுமுன்புசெய்ததவந்
தனையாளவென்றும்பரலோகஞ்சித்திக்குஞ்சத்தியமே. (௧௨)

அத்தமும் வாழ்வு மகத்துமட்டே விழியம்பொழுகம்
மெத்தியமாதரும்வீதிமட்டேவிம்மிவிம்மியிரு
கைத்தலமேல்வைத்தழுமைந்தருஞ்சுடுகாடுமட்டே
பற்றித்தொடருமிருவினைப்புண்ணியபாவமுமே. (௧௩)

சீயுங்குருதிச்செழுநீர்வழும்புஞ்செறிந்தெழுந்து
பாயும்புடைவையொன்றில்லாதபோதுபகலிரவா
யீயுமெறும்பும்புகுகின்றயோனிக்கிரவுபகன்
மாயுமனிதரைமாயாமல்வைக்கமருந்தில்லையே. (௧௪)

சீதப்பனிக்குண்டுசிக்கெனக்கந்தைதினமிரந்து
நீதுய்க்கச்சோறுமனைதோறுமுண்டுநினைவெழுந்தால்
வீதிக்குணல்லவிலைமாதருண்டிந்தமேதினியி
லேதுக்குநீசலித்தாய்மனமேயென்றும்புண்படவே. (௧௫)

ஆறுண்டு தோப்புண்டணிவீதி யம்பலந் தானுமுண்டு
நீறுண்டுகந்தைநெடுங்கோவணமுண்டுநித்தநித்த
மாறுண்டுலாவிமயங்குநெஞ்சேமனைதோறுஞ்சென்று
சோறுண்டுதூங்கிப்பின்சும்மாவிருக்கச்சுகமுமுண்டே. (௧௬)

உடுக்கக்கவிக்கக் குளிர்காற்று வெய்யிலுடங்கி வந்தாற்
றடுக்கப்பழையவொருவேட்டியுண்டுசகமுழுதும்
படுக்கப்புறந்திண்ணையெங்கெங்குமுண்டுபசித்துவந்தாற்
கொடுக்கச்சிவனுண்டுநெஞ்சேநமக்குக்குறைவில்லையே. (௧௭)

மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாம்
கேடுண்டெனும்படிகேட்டுவிட்டோமினிக்கேண்மனமே
யோடுண்டுகந்தையுண்டுள்ளேயெழுத்தைந்துமோதவுண்டு
தோடுண்டகண்டனடியார்நமக்குத்துணையுமுண்டே. (கஅ)

மாத்தானவத்தையுமாயாபுரியின்மயக்கத்தையு
நீத்தார்தமக்கொருநிட்டையுண்டோநித்தனன்புகொண்டு
வேர்த்தாற்குளித்துப்பசித்தாற்புசித்துவிழிதுயின்று
பார்த்தாலுலகத்தவர்போலிருப்பர்பற்றற்றவரே. (கக)

ஒன்றென்றிருதெய்வமுண்டென்றிருவுயர் செல்வமெல்லா
மன்றென்றிருபசித்தோர்முகம்பார்நல்லறமுநட்பு
நன்றென்றிருநடுநீங்காமலேநமக்கிட்டபடி
யென்றென்றிருமனமேயுனக்கேயுபதேசமிதே. (உ0)

நாட்டமென்றேயிருசற் குருபாதத்தை நம்புபொம்ம
லாட்டமென்றேயிருபொல்லாவுடலையடர்ந்தசந்தைக்
கூட்டமென்றேயிருசுற்றத்தைவாழ்வைக்குடங்கவிழ்நீ
ரோட்டமென்றேயிருநெஞ்சேயுனக்குபதேசமிதே. (உக)

என்செயலாவதியாதொன்றுமில்லையினித்தெய்வமே
யுன்செயலேயென்றுணரப்பெற்றேனிந்தவூனெடுத்த
பின்செய்ததீவினையாதொன்றுமில்லைப்பிறப்பதற்கு
முன்செய்ததீவினையோவிங்ஙனேவந்துமூண்டதுவே. (உஉ)

திருவேடமாகித்தெருவிற்பயின்றனைத்தேடிவந்து
பரிவாகப்பிச்சைபகருமென்றூனைப்பதம்பணிந்தேன்
கருவாகுமேதக்கட்டைகளைமேவக்கருதுமென்னை
யுருவாக்கிக்கொள்ளவல்லோவிங்ஙனேசிவனுற்றதுவே. (உ௩)

விட்டேனுலகம்விரும்பேனிருவினைவீணருடன்
கிட்டேனவருரைகேட்டுமிரேன்மெய்கெடாதநிலை
தொட்டேன்சுகதுக்கமற்றுவிட்டேன்றொல்லைநான்மறைக்கு
மெட்டேனெனும்பரமென்னிடத்தேவந்திங்கெய்தியதே. (உச)

அட்டாங்கயோகமுமாதாரமாறுமவத்தையைந்தும்
விட்டேறிப்போனவெளிதனிலேவியப்பொன்றுகண்டேன்
வட்டாகிச்சம்மதிப்பாலூறலுண்டுமகிழ்ந்திருக்க
வெட்டாதபேரின்பமென்னைவிழுங்கியிருக்கின்றதே. (உரு)

எரியெனக்கென்னும்புழுவோவெனக்கென்னுமிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும்பருந்தோவெனக்கெனுந்தான்புசிக்க
நரியெனக்கென்னும்புன்னாயெனக்கென்னுமிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தேனிதனாலென்னபேறெனக்கே. (உகூ)

அண்ணறன்வீதியர சிருப்பாகு மணிபடையோர்
நண்ணொருநாலொன்பதாமவரோவலுநண்ணுமிவ்வூர்
துண்ணென்பசிக்குமடைப்பள்ளியானசுகமுமெல்லா
மெண்ணிலிகாலமவமேவிடுத்தனமெண்ணரிதே. (௨௭)

என்பெற்றதாயருமென்னைப்பிணமென்றிகழ்ந்துவிட்டார்
பொன்பெற்றமாதரும்போவென்றுசொல்லிப்புலம்பிவிட்டார்
கொன்பெற்றமைந்தரும்பின்வலம்வந்துகுடமுடைத்தா
ருன்பற்றொழியவொருபற்றுமில்லையுடையவனே. (௨௮)

கறையற்றபல்லுங்கரித்துணியாடையுங்கள்ளமின்றிப்
பொறையுற்றநெஞ்சமும்பொல்லாதவூணும்புறந்திண்ணையுந்
தறையிற்கிடப்புமிரந்துண்ணுமோடுஞ்சகமறியக்
குறைவற்றசெல்வமென்றேகோலமாமறைகூப்பிடுமே. (௨௯)

எட்டுத்திசையும்பதினாறுகோணமுமெங்குமொன்றாய்
முட்டித்ததும்பிமுளைத்தோங்குசோதியைமூடரெல்லாங்
கட்டிச்சுருட்டித்தங்கக்கத்தில்வைப்பர்கருத்தில்வையார்
பட்டப்பகலையிரவென்றுகூறிடும்பாதகரே. (௩௦)

வாய்நாறுமூழன்மயிர்ச்சிக்குநாறிடுமையிடுங்கண்
பீநாறுமங்கம்பிணவெடிநாறும்பெருங்குழிவாய்ச்
சீநாறும்யோனியழுநாறுமிந்தியச்சேறுசிந்திப்
பாய்நாறுமங்கையர்க்கோவிங்ஙனேமனம்பற்றியதே. (௩௧)

உரைக்கைக்குநல்லதிருவெழுத்தைந்துண்டுரைப்படியே
செருக்கித்தரிக்கத்திருநீறுமுண்டுதெருக்குப்பையிற்
றரிக்கக்கரித்துணியாடையுமுண்டெந்தச்சாதியிலு
மிரக்கத்துணிந்துகொண்டேன்குறைவேதுமெனக்கில்லையே. ()

ஏதப்பட்டாயினிமேற்படும்பாட்டையிதென்றறிந்து
போதப்பட்டாயில்லைநல்லோரிடஞ்சென்றுபுல்லறிவால்
வாதைப்பட்டாய்மடமாதர்கலவிமயக்கத்திலே
பேதைப்பட்டாய்நெஞ்சமேயுனைப்போலில்லைபித்தருமே. (௩௩)

சுரப்பற்றுவல்வினைசுற்றமுமற்றுத்தொழில்களற்றுக்
கரப்பற்றுமங்கையர்கையிணக்கற்றுக்கவலையற்று
வரப்பற்றுநாதனைவாயாரவாழ்த்திமனமடங்கப்
பரப்பற்றிருப்பதன்றோபரமாபரமானந்தமே. (௩௪)

பேய்போற்றிரிந்துபிணம்போற்கிடந்திட்டபிச்சையெல்லா
நாய்போலருந்திநரிபோலுழன்றுநன்மங்கையரைத்
தாய்போற்கருதித்தமர்போலனைவர்க்குந்தாழ்மைசொல்லிச்
சேய்போலிருப்பர்கண்டீருண்மைஞானந்தெளிந்தவரே. (௩௫)

விடக்கேபருந்தின்விருந்தேசமண்டலவீணனிட்ட
முடக்கேபுழுவந்துறையிடமேநலமுற்றுமிலாச்
சடக்கேகருவிதளர்ந்துவிட்டாற்பெற்றதாயுந்தொடாத்
தொடக்கேயுனைச்சுமந்தேனின்னினேதுசுகமெனக்கே. (௩௬)

...ற்பயனென்னநொந்தாற்பயனென்னவாவதில்லை
...ாற்பயனென்னநின்னையொருவர்சுடவுரைத்த
பழுதாற்பயனென்னநன்மையுந்தீமையும்பங்கயத்தோ
னெழுதாப்படிவருமோசலியாதிரென்னைநெஞ்சே. (௩௭)

செல்வரைப்பின்சென்றுபசாரம்பேசித்தினந்தினமும்
பல்லினைக்காட்டிப்பரிதவியாமற்பரானந்தத்தி
னெல்லையிற்புக்குநல்லேகாந்தமாயெனக்காமிடத்தே
யல்லலற்றென்றிருப்பேனாலநீழலரும்பொருளே. (௩௮)

ஊரீருமக்கோருபதேசங்கேளுமுடம்படங்கப்
போரீர்சமணைக்கழுவேற்றுநீற்றைப்புறந்திண்ணையிற்
சாரீரனந்தலைச்சுற்றத்தைநீங்கிச்சகநகைக்க
வேரீருமக்கவர்தாமேதருவரிணையடியே. (௩௯)

நீற்றைப்புனைந்தென்னநீராடப்போயென்னநீமனமே
மாற்றிப்பிறக்கவகையறிந்தாயில்லைமாமறைநூ
லேற்றிக்கிடக்குமெழுகோடிமந்திரமென்னகண்டா
யாற்றிற்கிடந்துந்துறையறியாமலலைகின்றையே. (௪௰)

ஓங்காரமாய்நின்றவத்துவிலேயொருவித்துவந்து
பாங்காய்முளைத்தபயனறிந்தாற்பதினாலுலகு
நீங்காமனீங்கிநிறையாநிறைந்துநிறையுருவா
யாங்காரமானவர்க்கெட்டாக்கனிவந்தமர்ந்திடுமே. (௪௧)

விதியார்படைப்புமரியாரளிப்பும்வியன்கயிலைப்
பதியார்தொடைப்புநம்பாலணுகாதுபரானந்தமே
கதியாகக்கொண்டுமற்றெல்லாந்துயிலிற்கனவெனநீ
மதியாதிருமனமேவிதுகாணன்மருந்துனக்கே. (௪௨)

நாய்க்குண்டுதெண்டுநமக்குண்டுபிச்சைநமனைவெல்ல
வாய்க்குண்டுமந்திரபஞ்சாட்சரமதியாமல்வரும்
பேய்க்குண்டுநீறுதிகைப்புண்டுநின்றபிறவிப்பிணி
நோய்க்குண்டுதேசிகன்றன்னருணோக்கங்கணோக்குதற்கே. (௪௩)

நேமங்கணிட்டைகள்வேதங்களாகமநீதிநெறி
யோமங்கடர்ப்பணஞ்சந்திசெபமந்த்ரயோகநிலை
காமங்கள்சந்தனம்வெண்ணீறுபூசிநலமுடனே
சாமங்கடோறுமிவர்செய்யும்பூசைகள்சர்ப்பனையே. (௪௪)

நானென்றனைபுத்திசொன்னாலுங்கேட்டிலைநன்னெஞ்சமே
யேனிப்படிக்கெட்டுழலுகின்றாயினியேதுமிலா
வானத்தின்மீனுக்குவன்றூண்டிலிட்டவகையதுபோற்
போனத்தைமீளநினைக்கின்றனையென்னபுத்தியிதே. (௪௫)

அஞ்சக்கரமெனுங்கோடாலிகொண்டிந்தவைம்புலனும்
வஞ்சப்புலக்கட்டைவேரறவெட்டிவளங்கள்செய்து
விஞ்சத்திருத்திச்சதாசிவமென்கின்றவித்தையிட்டுப்
புஞ்சக்களைபறித்தேன்வளர்த்தேன்சிவபோகத்தையே. (௪௬)

தாயாருஞ்சுற்றமும்பெண்டிருங்கைவிட்டுத்தாழ்ந்திடுநா
ணீயாருநானுரொனப்பகர்வாரந்தநேரத்திலே
நோயாரும்வந்துகுடிகொள்வரோகொண்டநோயுமொரு
பாயாருநீயுமல்லாற்பின்னையேதுநட்பாமுடலே. (௪௭)

ஆயும்பொழுதுமயிர்க்கால்கடோறுமருங்கிருமி
தோயுமலக்குட்டையாகியகாயத்தைச்சுட்டுவிட்டாற்
பேயுநடனமிடுங்கடமாமென்றுபேசுவதை
நீயுமறிந்திலையோபொருடேடநினைந்தனையே. (௪௮)

பூணும்படிக்கல்லபொன்னுக்குத்தானல்லபூமிதனைக்
காணும்படிக்கல்லமங்கையர்க்கல்லநற்காட்சிக்கல்ல
சேணுங்கடந்தசிவனடிக்கல்லவென்சிந்தைகெட்டுச்
சாணும்வளர்க்கவடியேன்படுந்துயர்சற்றல்லவே. (௪௯)

வெட்டாதசக்கரம்பேசாதமந்திரம்வேறொருவர்க்
கெட்டாதபுட்பமிறையாததீர்த்தமினிமுடிந்து
கட்டாதலிங்கங்கருதாதநெஞ்சங்கருத்தினுள்ளே
முட்டாதபூசையன்றோகுருநாதன்மொழிந்ததுவே. (௫௦)

எருமுட்டைபிட்கினுதிர்ந்திடுஞ்செல்லுக்கெவரழுவார்
கருமுட்டைபுக்குக்கழலகன்றாய்கனதுக்கமதாய்ப்
பெருமுட்டுப்பட்டவர்போலழும்பேதையிர்பேத்துகிறீ
ரொருமுட்டும்வீட்டுமரணமமென்றைக்குமோதுமினே. (௫௧)

மையாடுகண்ணியுமைந்தரும்வாழ்வுமனையுஞ்செந்தீ
யையாநின்மாயையுருவெளித்தோற்றமகிலத்துள்ளே
மெய்யாயிருந்ததுநாட்செலநாட்செலவெட்டவெறும்
பொய்யாய்ப்பழங்கதையாய்க்கனவாய்மெல்லப்போனதுவே(௫௨)

ஆயாய்பலகலையாய்ந்திடுந்தூயவருந்தவர்பாற்
போயாகிலுமுண்மையைத்தெரிந்தாயில்லைபூதலத்தில்
வேயார்ந்ததோளியர்காமவிகாரத்தில்வீழ்ந்தழுந்திப்
பேயாய்விழிக்கின்றனைமனமேயென்னபித்துனக்கே. (௫௩)

அடியாருறவுமரன்பூசைநேசமுமன்புமன்றிப்
படிமீதில்வேறுபயனுளதோபங்கயன்வகுத்த
குடியானசுற்றமுந்தாரமும்வாழ்வுங்குயக்கலங்கள்
தடியாலடியுண்டவாறொக்குமென்றினஞ்சார்ந்திலரோ. (ருச)

ஆங்காரப்பொக்கசங்கோபக்களஞ்சியமாணவந்தா
னீங்காவரண்மனைபொய்வைத்தகூடம்விண்ணீடிவளர்
தேங்கார்பெருமதிற்காமவிலாசமித்தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந்தெப்படிஞானம்பலிப்பதுவே. (ருரு)

ஒழியாப்பிறவியெடுத்தேங்கியேங்கியுழன்றநெஞ்சே
யழியாப்பதவிக்கவுடதங்கேட்டியனாதியனை
மழுமான்கரத்தனைமால்விடையானைமனத்திலுன்னி
விழியாற்புனல்சிந்திவிம்மியழுநன்மைவேண்டுமென்றே. (ருகா)

நாய்க்கொருசூலுமதற்கோர்மருத்துவநாட்டிலுண்டோ
பேய்க்கொருஞானம்பிடிபடுமோபெருங்காஞ்சிரங்கா
யாக்குவராதருந்துவாரதுபோலுடம்பு
தீக்கிரையாவதல்லாலேதுக்காமிதைச்செப்புமினே. (ருஎ)

கச்சிற்கிடக்குங்கனதனத்திற்கடைக்கண்கள்பட்டே
யிச்சித்திருக்கின்றவேழைநெஞ்சேயிமவான்பயந்த
பச்சைப்பசுங்கொடியுண்ணாமுலைபங்கர்பாதத்திலே
தைச்சுக்கிடமனமேயொருகாலுந்தவறில்லையே. (ருஅ)

மானார்விழியைக்கடந்தேறிவந்தனன்வாழ்குருவுங்
கோனாகியென்னைக்குடியேற்றிக்கொண்டனன்குற்றமில்லை
போனாலும்பேறிருந்தாலுநற்பேறிதுபொய்யன்றுகா
ணானாலுமிந்தவுடம்போடிருப்பதருவருப்பே. (ருகூ)

சற்றாகினுந்தன்னைத்தானறியாய்தனையாய்ந்தவரை
யுற்றாகிலுமுரைக்கப்பொருந்தாயுனக்கானதிலை
பற்றாய்குருவைப்பணியாய்பரத்தையர்பாலிற்சென்றென்
பெற்றாய்மடநெஞ்சமேயுனைப்போலில்லைபித்தனுமே. (சூ0)

உளியிட்டகல்லையுமொப்பிட்டசாந்தையுமூத்தையறப்
புளியிட்டசெம்பையும்போற்றுகிலேனுயர்பொன்னெனவே
யொளியிட்டதாளிரண்டுள்ளேயிருத்துவதுண்மையென்று
வெளியிட்டடைத்துவைத்தேனினிமேலொன்றும்வேண்டிலனே.

திருச்சிற்றம்பலம்.

## தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடிய வெண்பா.

ஐயிரண்டுதிங்களாவங்கமெலாநொந்துபெற்றுப்
பையலென்றபோதேபரிந்தெடுத்துச் – செய்யவிரு
கைப்புறத்திலேந்திக்கனகமுலைதந்தாளை
யெப்பிறப்பிற்காண்பேனினி. (க)

முந்தித்தவங்கிடந்துமுந்நூறுநாட்சுமந்தே
யந்திபகலாச்சிவனையாதரித்துத் – தொந்தி
சரியச்சுமந்துபெற்றதாயார்தமக்கோ
வெரியத்தழன்மூட்டுவேன். (உ)

வட்டிலிலுந்தொட்டிலிலுமார்மேலுந்தோண்மேலுங்
கட்டிலிலும்வைத்தென்னைக்காதலித்து – முட்டச்
சிறகிலிட்டுக்காப்பாற்றிச்சீராட்டுந்தாய்க்கோ
விறகிலிட்டுத்தீமூட்டுவேன். (ங)

நொந்துசுமந்துபெற்றுநோவாமலேந்திமுலை
தந்துவளர்த்தெடுத்துத்தாழாமே – யந்திபகல்
கையிலேகொண்டென்னைக்காப்பாற்றுந்தாய்தனக்கோ
மெய்யிலேதீமூட்டுவேன். (ச)

அரிசியோநானிடுவேனாத்தாடனக்கு
வரிசையிட்டுப்பார்த்துமகிழாம – லுருசியுள்ள
தேனேயமிர்தமேசெல்வத்திரவியபு
மானேயெனவழைத்தவாய்க்கு. (ரு)

அள்ளியிடுவதரிசியோதாய்தலைமேற்
கொள்ளிதனைவைப்பேனோகூசாமன் – மெள்ள
முகமேன்முகம்வைத்துமுத்தாடியென்றன்
மகனேயெனவழைத்தவாய்க்கு. (சு)

### விருத்தம்.

முன்னையிட்டதீமுப்புரத்திலே
பின்னையிட்டதீதென்னிலங்கையி
லன்னையிட்டதீயடிவயிற்றிலே
யானுமிட்டதீமூள்கமூள்கவே. (எ)

### வெண்பா.

வேகுதேதீயதனில்வெந்துபொடிசாம்ப
லாகுதேபாவியேனையகோ – மாகக்
குருவிபறவாமற்கோதாட்டியென்னைக்
கருதிவளர்த்தெடுத்தகை. (அ)

வெந்தாளோசோணகிரிவித்தகாநின்பதத்தில்
வந்தாளோவென்னைமறந்தாளோ - சந்ததமு
முன்னையேநோக்கியுகந்துவரங்கிடந்தென்
றன்னையேயீன்றெடுத்ததாய். (கூ)

வீற்றிருந்தாளன்னைவீதிதனிலிருந்தாள்
நேற்றிருந்தாளின்றுவெந்துநீறானாள் - பாற்றெளிக்க
வெல்லீரும்வாருங்களேதென்றிரங்காமல்
எல்லாஞ் சிவமயமே யாம். (க0)

## இடைமருது.

மென்றுவிழுங்கிவிடாய்கழிக்கநீர்தேட
லென்றுவிடியுமெனக்கென்கோவே-நன்றி
கருதார்புரமூன்றுங்கட்டழலாற்செற்ற
மருதாவுன்சந்நிதிக்கேவந்து. (க)

## ஒற்றி.

கண்டங்கரியதாங்கண்மூன்றுடையதா
மண்டத்தைப்போலவழகியதாந் - தொண்ட
ருடலுருகத்தித்திக்குமோங்குபுகழொற்றிக்
கடலருகேநிற்குங்கரும்பு. (உ)

ஒடுவிழுந்துசிப்பாயுமொன்பதுவாய்ப்புண்ணுக்
கிடுமருந்தையானறிந்துகொண்டேன் - கடுவருந்துந்
தேவாதிதேவன்றிருவொற்றியூர்த்தெருவிற்
போவாரடியிற்பொடி. (ந)

வாவியெல்லாந்தீர்த்தமணலெல்லாம்வெண்ணீறு
காவனங்களெல்லாங்கணநாதர் - பூவுலகி
லீதுசிவலோகமென்றென்றேமெய்த்தவத்தோ
ரோதுந்திருவொற்றியூர். (ச)

## திருவாரூர்.

ஆரூரரிங்கிருக்கவவ்வூர்த்திருநாளென்
றூரூர்கடோறுமுழலுவீர் - நேரே
யுளக்குறிப்பைநாடாதவூமர்காணீவிர்
விளக்கிருக்கத்தீத்தேடுவீர். (ரு)

எருவாய்க்கிருவிரன்மேலேறுபுழுக்கூட்டுக்
கருவாய்க்கேகண்கலக்கப்பட்டாய் - திருவாரூர்த்
தேரோடும்வீதியிலேசெத்துக்கிடந்தாயே
நீரோடுந்தாரைக்கேநீ. (சா)

திருக்காஞ்சி.

எத்தனையூரெத்தனைவீடெத்தனைதாய்பெற்றவர்க
ளெத்தனைபேரிட்டழைக்கவேனென்றே - னித்த
மெனக்கிளையாற்றயேகம்பாகம்பா
வுனக்குத்திருவிளையாட்டோ. (எ)

கச்சிக்காரோணம்.

அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகா - மெத்தப்
பசிக்குதையாபாவியேன்பாழ்வயிற்றைப்பற்றி
யிசிக்குதையாகாரோணரே. (அ)

திருக்காளத்தி.

பொய்யையொழியாய்புலாலைவிடாய்காளத்தி
யையனையெண்ணுயறஞ்செய்யாய் - வெய்ய
சினமேயொழியாய்திருவெழுத்தைந்தோதாய்
மனமேயுனக்கென்னமாண்பு. (கூ)

திருவிருப்பையூர்.

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே - நாதா
விருப்பையூர்வாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையூர்வாராமற்கா. (கo)

திருவையாறு.

மண்ணுந்தணலாறவானும்புகையாற
வெண்ணரியதாயுமிளைப்பாறப் - பண்ணுமயன்
கையாறவுமடியேன்காலாறவுங்கண்பா
ரையாதிருவையாறா. (கக)

குற்றாலம்.

காலன்வருமுன்னேகண்பஞ்சடைமுன்னே
பாலுண்கடைவாய்படுமுன்னே - மேல்விழுந்தே
யுற்றாருமுன்னேயூரார்சுடுமுன்னே
குற்றாலத்தானையேகூறு. (கஉ)

பொது.

சிற்றம்பலமுஞ்சிவனுமருகிருக்க
வெற்றம்பலந்தேடிவிட்டோமே - நித்தம்
பிறந்திடத்தைத்தேடுதேபேதைமடநெஞ்சம்
மறந்திடத்தைநாடுதேகண். (க)

தோடவிழும்பூங்கோதைத்தோகையுனையிப்போது
தேடினவர்போய்விட்டார்தேறியிரு - நாடிநீ
யென்னைநினைத்தாலிடுப்பிலுதைப்பேனு
னுன்னைநினைத்தாலுதை. (உ)

வாசற்படிகடந்துவாராதபிச்சைக்கிங்
காசைப்படுவதில்லையண்ணலே - யாசைதனைப்
பட்டிறந்தகாலமெலாம்போதும்பரமேட்டி
சுட்டிறந்தஞானத்தைச்சொல். (ங)

நச்சரவம்பூண்டானைநன்றாத்தொழுவதுவு
மிச்சையிலேதானங்கிருப்பதுவும் - பிச்சைதனை
வாங்குவதுமுண்பதுவும்வந்துதிருவாயிலிலே
தூங்குவதுந்தானேசுகம். (ச)

இருக்குமிடந்தேடியென்பசிக்கேயன்ன
முருக்கமுடன்கொண்டுவந்தாலுண்பேன் - பெருக்க
வழைத்தாலும்போகேன்ரனேயென்றேக
மிளைத்தாலும்போகேனினி. (ரு)

விட்டுவிடப்போகுதுயிர்விட்டவுடனேயுடலைச்
சுட்டுவிடப்போகின்றார்சுற்றத்தார் - பட்டதுபட்
டெந்நேரமுஞ்சிவனையேத்துங்கள்போற்றுங்கள்
சொன்னேனதுவேசுகம். (சு)

ஆவியொடுகாயமழிந்தாலுமேதினியிற்
பாவியென்றுநாமம்படையாதே - மேவியசீர்
வித்தாரமுங்கடம்பும்வேண்டாமடநெஞ்சே
செத்தாரைப்போலேதிரி. (எ)

வெட்டவெளியானவெளிக்குந்தெரியாது
கட்டளையுங்கைப்பணமுங்காணாதே - இட்டமுடன்
பற்றென்றுற்பற்றுதுபாவியேனெஞ்சிலவன்
இற்றெனவேவைத்தவினிப்பு. (அ)

பின்முடுகு வெண்பா.

இப்பிறப்பைநம்பியிருப்பரோநெஞ்சகமே
வைப்பிருக்கவாயின்மனையிருக்கச் - சொப்பனம்போல்
விக்கிப்பற்கிட்டக்கண்மெத்தப்பஞ்சிட்டப்பைக்
கக்கிச்செத்துக்கொட்டக்கண்டு (கூ)

மேலுமிருக்கவிரும்பினையேவெள்விடையோன்
சீலமறிந்திலையேசிந்தையே - கால்கைக்குக்
கொட்டையிட்டுமெத்தையிட்டுக்குத்திமொத்தப்பட்டவுடல்
கட்டையிட்டுச்சுட்டுவிடக்கண்டு. (கம)

ஒன்பதுவாய்த்தோற்பைக்கொருநாளைப்போலவே
யன்புவைத்துநெஞ்சேயலைந்தாயே - வன்கழுக்க
டத்தித்தத்திச்சட்டைதட்டிக்கட்டிப்புட்டுக்
கத்திக்குத்தித்தின்னக்கண்டு. (௧௧)

இன்னம்பிறக்கவிசைவையோநெஞ்சமே
மன்னரிவரொன்றிருந்துவாழ்ந்தவரை - முன்ன
மெரிந்தகட்டைமீதிலிணைக்கோவணத்தை
யுரிந்துருட்டிப்போட்டதுகண்டு. (௧௨)

முதற்சங்கமூதூட்டுமொய்குழலார்தம்மை
நடுச்சங்கநல்விலங்குபூட்டும் - கடைச்சங்க
மாம்போதனவூதுமம்மட்டோவிம்மட்டோ
நாம்பூமிவாழ்ந்தநலம். (௧௩)

எத்தனைநாள்கூடியெடுத்தசரீரமிவை
யத்தனையுமண்டின்பதல்லவோ - வித்தகனார்
காலைப்பிடித்துமெள்ளக்கங்குல்பகலற்றிடத்தே
மேலைக்குடியிருப்போமே. (௧௪)

எச்சிலென்றுசொல்லியிதமகிதம்பேசாதே
யெச்சிலிருக்குமிடமறியீ - ரெச்சிறனை
யுய்த்திருந்துபார்த்தாலொருமைவெளிப்படும்பின்
சித்தநிராமயமாமே. (௧௫)

எத்தனைபேர்நட்டகுழியெத்தனைபேர்தொட்டமுலை
யெத்தனைபேர்பற்றியிழுத்தவிதழ் - நித்தநித்தம்
பொய்யடாபேசும்புவியின்மடமாதரைவிட்
டுய்யடாவுய்யடாவுய். (௧௬)

இருப்பதுபொய்போவதுமெய்யென்றெண்ணிநெஞ்சே
யொருத்தருக்குந்தீங்கினைநீயுன்னாதே - பருத்ததொந்தி
நம்மதென்றுநாமிருப்பநாய்நரிகள்பேய்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந்தான். (௧௭)

எத்தொழிலைச்செய்தாலுமேதவத்தைபட்டாலு
முத்தர்மனமிருக்குமோனத்தே - வித்தகமாய்க்
காதிவிளையாடியிருகைவீசிவந்தாலுந்
தாதிமனநீர்க்குடத்தேதான். (௧௮)

மாலைப்பொழுதினறுமஞ்சளரைத்தேகுளித்து
வேலைமினக்கிட்டுவிழித்திருந்து - சூலாகிப்
பெற்றாள்வளர்த்தாள்பெயரிட்டாள்பெற்றபிள்ளை
பித்தானாலென்செய்வாள்பின். (௧௯)

விருத்தம்.

நாப்பிளக்கப் பொய்யுரைத்து நவநிதியந்தேடி
நலனொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கப்பொய்யுரைத்துப் புற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப் புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவர்பிளந்தமரத்துளையிற்கானுழைத்துக்கொண்டீர்
ஆப்பதனையசைத்துவிட்டகுரங்கதனைப்போல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீரே. (உ0)

இதுவுமது வேறு.

வடிவந்தானும்வாலிபம்மகளுந்தாயுமாமியும்
படிகொண்டாருமூரிலேபழிகொண்டாடனீதியோ
குடிவந்தானுமேழையேகுயவன்றானுங்கூழையோ
நடுநின்றானும்வீணனோநகரஞ்சூறையானதே. (உக)

இதுவுமது வேறு.

மண்ணுமுருகுமர்முருகுமரயையுருகுமானுருகும்
பெண்ணுமுருகுமாணுருகும்பேதாபேதவகையுருகும்
அண்ணலுருகுமிடத்தமர்ந்தவாத்தாளுருகுமரவணையான்
எண்ணியுருகுங்குருநாதனென்பாலுரைத்தவோர்மொழியே. ()

திருச்சிற்றம்பலம்.

---

## முதல்வன் முறையீடு.

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மூலமறியேன்முடியுமுடிவறியேன்
ஞாலத்துட்பட்டதுயர்நாடநடுக்குதடா.

அறியாமையாமலத்தாலறிவுமுதற்கெட்டனடா
பிரியாவினைப்பயனாற்பிடித்துப்பிடித்தனடா.

தனுவாதியநான்குந்தாயும்மயங்கினண்டா
மனுவாதிசத்திவலையிலகப்பட்டனடா.

மாமாயையென்னும்வனத்திலலைகிறண்டா
தாமாயுலகனைத்துந்தாதுகலங்கிறண்டா. (ச)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

மண்ணாசைப்பட்டேனைமண்ணுண்டுபோட்டதடா
பொன்னாசைபெண்ணாசைபோகேனேயென்குதே.

மக்கள்சுற்றத்தாசைமறக்கேனேயென்குதே
திக்காசாமாசைய்துறீரோனேயென்குதே.

வித்தைகற்குமாசையதுவிட்டொழியேனென்குதே
சித்துகற்குமாசைசிதையேனேயென்குதே.

மந்திரத்திலாசைமறக்கேனேயென்குதே
சுந்தரத்திலாசைதுறக்கேனேயென்குதே.

சுட்டுவர்க்கத்தாசைகழலேனேயென்குதே
செட்டுதனிலாசைசிதையேனேயென்குதே.

மாற்றுஞ்சலவைமறக்கேனேயென்குதே
சோற்றுக்குழியுமின்னந்தூரோனேயென்குதே. (கo)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

ஐந்துபுலனுமடங்கேனேயென்குதே
சிந்தைதவிக்கிறதுந்தேறேனேயென்குதே.

காமக்குரோதங்கடக்கேனேயென்குதே
நாமேயரசென்றுநாடோறுமெண்ணுதே.

அச்சமாங்காரமடங்கேனேயென்குதே
கைச்சுமின்னுமானங்கழலேனேயென்குதே.

நீர்க்குமிழியாமுடலைநித்தியமாயெண்ணுதே
ஆர்க்குமுயராசையழியேனேயென்குதே.

கண்ணுக்குக்கண்ணெதிரேகட்டையில்வேகக்கண்டும்
எண்ணுந்திருமாயிருப்போமென்றெண்ணுதே.

அநித்தியத்தைநித்தியமென்றூதரவாயெண்ணுதே
தனித்திருக்கேனென்குதேதனைமறக்கேனென்குதே.

நரகக்குழியுமின்னுநான்புசிப்பேனென்குதே
உரகப்படத்தல்குலுனைக்கெடுப்பேனென்குதே.

குரும்பைமுலையுங்குடிகெடுப்பேனென்குதே
அரும்புவிழியுமென்றனுவியுண்பேனென்குதே.

மாதருருக்கொண்டுமறலிவஞ்சமெண்ணுதே
ஆதாவுமற்றிங்கரக்காயுருகிறண்டா.
கந்தனையீன்றருளுங்கன்னிவனநாதா
எந்தவிதத்திலுனேறிப்படருவண்டா. (உo)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

புல்லாகிப்பூடாய்ப்புலர்ந்தநாள்போதாதோ
கல்லாய்மரமாய்க்கழிந்தநாள்போதாதோ.

கீரியாய்க்கீடமாய்க்கெட்டநாள்போதாதோ
நீரியாயூர்வனவாய்நின்றநாள்போதாதோ.

பூதமொடுதேவருமாய்ப்போனநாள்போதாதோ
வேதனைசெய்தானவராய்வீந்தநாள்போதாதோ.

அன்னைவயிற்றிலழிந்தநாள்போதாதோ
மன்னவனாய்வாழ்ந்துமரித்தநாள்போதாதோ.

தாயாகித்தாரமாய்த்தாழ்ந்தநாள்போதாதோ
சேயாய்ப்புருடனுமாய்ச்சென்றநாள்போதாதோ.

நோயுண்ணவேமெலிந்துநொந்தநாள்போதாதோ
பேயுண்ணப்பேயாய்ப்பிறந்தநாள்போதாதோ.

ஊனவுடல்கூன்குருடாயுற்றநாள்போதாதோ
ஈனப்புசிப்பிலிளைத்தநாள்போதாதோ.

பட்டகளையும்பரதவிப்பும்போதாதோ
கெட்டநாள்கெட்டெனென்றுகேளாதும்போதாதோ.

இல்லாமைக்கேயழுதுநின்றநாள்போதாதோ
எல்லாருமென்பாரமெடுத்தநாள்போதாதோ.

காமன்கணையாற்கடைபட்டல்போதாதோ
ஏமன்கரத்தாலிடியுண்டல்போதாதோ.

நான்முகன்பட்டோலைநறுக்குண்டல்போதாதோ
தேன்றுளபத்தானேமிதேக்குண்டல்போதாதோ.

உருத்திரனார்சங்காரத்துற்றநாள்போதாதோ
வருத்தமறிந்தையிலைவாவென்றழைத்தையிலை. (ரு௨)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

பிறப்பைத்தவிர்த்தையிலைபின்னாகக்கொண்டையிலை
இறப்பைத்தவிர்த்தையிலையென்னென்றுகேட்டையிலை.

பாசமெரித்தையிலைபரதவிப்பைத்தீர்த்தையிலை
பூசியநீற்றைப்புனையென்றளித்தையிலை.

அடிமையென்றுசொன்னையிலையக்குமணிதந்தையிலை
விடுமுலகம்போக்கியுன்றன்வேடமளித்தையிலை.

உன்னிலழைத்தையிலையொன்றாக்கிக்கொண்டையிலை
நின்னடியார்கூட்டத்தினீயழைத்துவைத்தையிலை.

ஓங்குபரத்துளளித்தவடியார்க்கடியான்
ஈங்கோரடியானெமக்கென்றுரைத்தையிலை.

நாமந்தரித்ததையிலேநானொழியநின்றதையிலே
சேமவருளிலெனைச்சிந்தித்தழைத்ததையிலே.

முத்தியளித்ததையிலேமோனங்கொடுத்ததையிலே
சித்தியளித்ததையிலேசீராட்டிக்கொண்டதையிலே.

தவிர்ப்பைத்தவிர்த்ததையிலேதானாக்கிக்கொண்டதையிலே
அவிப்பரியதீயாமென்றனைசைதவிர்த்ததையிலே.

நின்றநிலையினிறுத்தியெனைவைத்ததையிலே
துன்றுங்கரணமொடுதொக்கழியப்பார்த்ததையிலே.

சட்டவுலகக்காட்சிக்கட்டொழியப்பார்த்ததையிலே
நிட்டையிலேநில்லென்றுநீநிறுத்திக்கொண்டதையிலே. (சஉ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

கடைக்கணருள்தாடாகன்னிவனநாதா
கெடுக்குமலமொருக்கிக்கிட்டிவரப்பாரோடா.

காதல்தணியேனோகண்டுமகிழேனோ
சாதல்தவிரேனோ சங்கடந்தான்தீரேனோ.

உன்னைத்துதியேனோவூர்நாடிவாரேனோ
பொன்னடியைப்பாரேனோபூரித்துநில்லேனோ.

ஓங்காரப்பொற்சிலம்பினொல்லாசம்பாரேனோ
பாங்கானதண்டைபலபணியும்பாரேனோ.

வீரகண்டாமணியின்வெற்றிதனைப்பாரேனோ
சூரர்கண்டுபோற்றுமந்தச்சுந்தரத்தைப்பாரேனோ.

இடையில்புலித்தோல்விருந்தநலம்பாரேனோ
விடையிலெழுந்தருளும்வெற்றிதனைப்பாரேனோ.

ஆனையுரிபோர்த்தவழகுதனைப்பாரேனோ
மானைப்பிடித்தேந்துமலர்க்கரத்தைப்பாரேனோ.

மாண்டார்தலைபூண்டமார்பழகைப்பாரேனோ
ஆண்டார்நமக்கென்றறைந்துதிரியேனோ.

கண்டங்கறுத்துநின்றகாரணத்தைப்பாரேனோ
தொண்டர்குழுவினின்றதோற்றமதைப்பாரேனோ.

அருள்பழுத்தமாமதியாமாநநத்தைப்பாரேனோ
திருநயனக்கடையொளிருஞ்செழுங்கொழுமைபாரேனோ.

செங்குமிழின்றண்டம்வளர்சிங்காரம்பாரேனோ
அங்கனியைவென்றவதரத்தைப்பாரேனோ.

முல்லைநிலவெறிக்குமூரலொளிபாரோனே
அல்லார்புருவத்தழகுதனைப்பாரோனே.

மகரங்கிடந்தொளிரும்வண்மைதனைப்பாரோனே
சிகரமுடியழகுஞ்செஞ்சடையும்பாரோனே.

கங்கையொடுதிங்கணின்றகாட்சிதனைப்பாரோனே
பொங்கரவைத்தான்சடையிற்பூண்டவிதம்பாரோனே.

சரக்கொன்றைபூத்தசடைக்காட்டைப்பாரோனே
எருக்கறுகூமத்தையணியேகாந்தம்பாரோனே.

கொக்கிறகுசூடிநின்றகொண்டாட்டம்பாரோனே
அக்கினியையேந்திநின்றவாநந்தம்பாரோனே.

தூக்கியகாலுந்துடியிடையும்பாரோனே
தாக்குமுயலகன்மேற்றண்டவத்தைப்பாரோனே.

வீசுகரமும்விகசிதமும்பாரோனே
ஆசையளிக்குமபயகரம்பாரோனே.

அரிபிரமர்போற்றவமரர்சயசயெனப்
பெரியம்மைபாகம்வளர்பேரழகைப்பாரோனே.

சுந்தரநீற்றின்சொகுசுதனைப்பாரோனே
சந்திரசேகரனைத்தயவுசெய்தல்பாரோனே. (கூஉ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

கெட்டநாள்கெட்டாலுங்கிருபையினிப்பாரோடா
பட்டநாள்பட்டாலும்பதமெனக்குக்கிட்டாதோ.

நற்பருவமாக்குமந்தநாளெனக்குக்கிட்டாதோ
எப்பருவமுங்கழன்றவேகாந்தங்கிட்டாதோ.

வாக்கிறந்துநின்றமவுனமதுகிட்டாதோ
தாக்கிறந்துநிற்குமந்தத்தற்சுத்திகிட்டாதோ.

வெந்துயரைத்தீர்க்குமந்தவெட்டவெளிகிட்டாதோ
சிந்தையையந்தீர்க்குமந்தத்தேறலதுகிட்டாதோ.

ஆனவடியார்க்கடிமைகொளக்கிட்டாதோ
ஊனமறவெள்ளையுணர்த்துவித்தல்கிட்டாதோ.

என்னென்றுசொல்லுவண்டாவென்குருவேகேளேடா
பின்னையெனக்குநீயல்லாற்பிறிதில்லையே. (கூஅ)

கன்னிவனநாதா கன்னிவனநாதா.

அன்னவிகாரமதுவற்றவிடங்கிட்டாதோ
சொன்னவிகாரந்தொலைந்தவிடங்கிட்டாதோ.

உலகவிகாரமொழிந்தவிடங்கிட்டாதோ
மலக்குழுவின்மின்னூர்வசியாதுங்கிட்டாதோ.

ஒப்புவமைபற்றொழிந்தவிடங்கிட்டாதோ
செப்புதற்குமெட்டாத்தெளிந்தவிடங்கிட்டாதோ.

வாக்குமனாதீதவகோசரத்திற்செல்லவெனைத்
தாக்குமருட்குருவேநின்றாளிணைக்கேயான்போற்றி. (எஉ)

பட்டணத்தார் முதல்வன் முறையீடு
முற்றிற்று.

---

## அருட்புலம்பல்.

ஐங்கரனைத்தெண்டனிட்டேனருளடையவேண்டுமென்று
தங்காமல்வந்தொருவன்றற்சொருபங்காட்டியெனை.

கொள்ளைப்பிறப்பறுக்கக்கொண்டான்குருவடிவம்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி.

ஆதாரமோராறுமைம்பத்தோரக்ஷரமும்
சூதானகோட்டையெல்லாஞ்சுட்டான்றுரிசறவே.

மெத்தவிகாரம்விளைக்கும்பலபலவாம்
தத்துவங்களெல்லாந்தலைகெட்டுவெந்ததடி.

என்னோடுடன்பிறந்தாரெல்லாரும்பட்டார்கள்
தன்னந்தனியேதரித்திருக்கமாட்டேண்டி.

எல்லாரும்பட்டகளமென்றுதொலையுமடி
சொல்லியழுதாற்றுயரமெனக்காறுமடி.

மண்முதலாமைம்பூதமாண்டுவிழக்கண்டேண்டி
விண்முதலாமைம்பொறிகள்வெந்துவிழக்கண்டேண்டி.

நீக்காப்புலன்களைந்துநீறாகவெந்ததடி
வாக்காதியைவரையுமாண்டுவிழக்கண்டேண்டி.

மனக்கரணமத்தனையும்வகைவகையேமட்டழிய
இனக்கரணத்தோடேயெரிந்துவிழக்கண்டேண்டி.

ஆத்துமதத்துவங்கள் அடுக்கழியவெந்ததடி
போற்றும்வகையெப்படியோபோதமிழந்தானே.

வித்தியாதத்துவங்கள்வெந்துவிழக்கண்டேண்டி
சுத்தவித்தையைந்தினையுஞ்சுட்டான்றுரிசறவே.

மூன்றுவகைக்கிளையுமுப்பத்தறுவரையும்
கான்றுவிழச்சுட்டுக்கருவேரறுத்தாண்டி.

குருவாகிவந்தானோகுலமறுக்கவந்தானோ
உருவாகிவந்தானோவுருவழிக்கவந்தானோ.

கேடுவருமென்றறியேன்கெடுமதிகண்டோற்றாமல்
பாடுவருமென்றறியேன்பதியாண்டிருந்தேண்டி.

எல்லாரும்பட்டகளமின்னவிடமென்றறியேன்
பொல்லாங்குதீர்க்கும்பொறியிலியைக்கண்டேண்டி.

உட்கோட்டைக்குள்ளிருந்தாரொக்கமடிந்தார்கள்
அக்கோட்டைக்குள்ளிருந்தாரறுபதுபேர்பட்டார்கள்.

ஒக்கமடிந்ததடியூடுருவவெந்ததடி
கற்கோட்டையெல்லாங்கரிக்கோட்டையாச்சுதடி. (௧௭)

தொண்ணூற்றறுவரையுஞ்சுட்டான்றரிசறவே
கண்ணேறுபட்டதடிகருவேரறுத்தாண்டி.

ஓங்காரங்கெட்டதடிவுள்ளதெல்லாம்போச்சுதடி
ஆங்காரங்கெட்டதடியடியோடறுத்தாண்டி.

தளையாங்குடிலைமுதல்தட்டுருவவெந்ததடி
இளையுமனத்திடும்பையெல்லாமறுத்தாண்டி.

முன்னைவினையெல்லாமுழுதுமறுத்தாண்டி
தன்னையறியவேதானொருத்தியானேண்டி.

என்னையேநானறியவிருவினையுமீடழித்துத்
தன்னையறியத்தலமெனக்குச்சொன்னாண்டி.

தன்னையறிந்தேண்டிதனிக்குமரியானேண்டி
தன்னந்தனியேதனியிருக்கும் பக்குவமோ.

வீட்டிலொருவரில்லைவெட்டவெளியானேண்டி
காட்டுக்கெறித்தநிலாகனவாச்சேகண்டதெல்லாம்.

நகையாரோகண்டவர்கள்நாட்டுக்குப்பாட்டலவோ
பகையாரோகண்டவர்கள்பார்த்தாருக்கேச்சலவோ.

இந்நிலைமைகண்டாண்டியெங்குமிருந்தாண்டி
கன்னியழித்தாண்டிகற்பைக்குலைத்தாண்டி.

கற்புக்குலைத்தமையுங்கருவேரறுத்தமையும்
பொற்புக்குலைத்தமையும்போதமிழந்தமையும்.

என்னவினைவருமோவின்னமெனக்கென்றறியேன்
சொன்னசொல்லெல்லாம்பலித்ததடிசோர்வறவே.

கங்குல்பகலற்றிடத்தேகாட்டிக்கொடுத்தாண்டி
பங்கமழித்தாண்டிபார்த்தானைப்பார்த்திருந்தேன்.

சாதியிற்கூட்டுவரோசாத்திரத்துக்குள்ளாமோ
ஓதியுணர்ந்ததெல்லாமுள்ளபடியாச்சுதடி.

என்னகுற்றஞ்செய்தேனோவெல்லாருங்காணாமல்
அன்னைசுற்றமெல்லாமறியாரோவம்புவியில்.

சொன்னானைத்தின்றேனோதின்னாக்கொன்றேனோ
எண்ணாதெல்லாமெண்ணுமிச்சைமறந்தேனோ.

சாதியிற்கூட்டுவரோசமயத்தோரொண்ணுவரோ
பேதித்துவாழ்ந்ததெல்லாம்பேச்சுக்கிடமாச்சுதடி.

கண்டார்க்குப்பெண்ணலவோகாணார்க்குக்காமமடி
உண்டார்களுண்டதெலாமுணல்லாதுண்பர்களோ.

கொண்டார்கள்கொண்டதெல்லாங் கொள்ளாதார்கொள்ளுவரோ
விண்டவர்கள்கண்டவரோகண்டவர்கள்விண்டவரோ. [ரோ

பண்டாயநான்மறைகள்பாடும்பரிசலவோ
தொண்டாயதொண்டருளந்தோற்றியொடுங்குமதோ.

ஓதவரிதோவொருவருணர்வரிதோ
பேதமறவெங்கும்விளங்கும்பெருமையன்காண். (௩௭)

வாக்குமனமுங்கடந்தமனோலயன்காண்
நோக்கவரியவன்காணுண்ணியரினுண்ணியன்காண்.

சொல்லுக்கடங்கான்காண்சொல்லிறந்துநின்றவன்காண்
கல்லுளிருந்தகனலொளிபோனின்றவன்காண்.

சுட்டிறந்தபாழதனிற்சுகித்திருக்கச்சொன்னவன்காண்
ஏட்டிலெழுத்தோவெழுதினவன்கைப்பிழையோ.

சும்மாவிருக்கவைத்தான்சூத்திரத்தைநானறியேன்
அம்மாபொருளிதெனவடையவிழுங்கினண்டி.

பார்த்தவிடமெல்லாம்பரமாகக்கண்டேண்டி
கோத்தநிலைகுலைத்தகொள்கையறியேண்டி.

மஞ்சனமாட்டிமலர்பறித்துச்சாத்தாமல்
நெஞ்சுவெறும்பாழானேனின்றநிலைகாணேண்டி.

பாடிப்படித்திருந்தும்பன்மலர்கள்சாத்தாமல்
ஓடித்திரியாமலுருக்கெட்டுவிட்டேண்டி.

மாணிக்கத்துள்ளொளிபோல்மருவியிருந்தாண்டி
பேணித்தொழுமடியார்பேசாப்பெருமையன்காண்.

அன்றுமுதலின்றளவுமறியாப்பருவமதில்
என்றும்பொதுவாயிருந்தநிராமயன்காண்.

சித்தவிகாரத்தாலேசின்மயனைக்காணாமல்
புத்திகலங்கிப்புகுந்தேன்பொறிவழியே.

பத்தியறியாமற்பாழிற்கவிழ்ந்தேண்டி
ஒத்தவிடநித்திரையென்றொத்துமிருந்தேண்டி.

செத்தாரையொத்தேண்டிசிந்தைதெளிந்தேண்டி
மற்றுருமில்லையடிமறுமாற்றங்காணேண்டி.

கல்வியல்லகேள்வியல்லகைகாட்டுங்காரணங்காண்
எல்லையளவற்றதடியெங்குநிறைந்ததடி.

வாசாமகோசரத்தைமருவியிடங்கொண்டாண்டி
ஆசூசமில்லாண்டியறிவுக்கறிவாண்டி.

பத்துத்திசைக்குமடங்காப்பருவமடி
எத்திசைக்குமெங்குமிடைவிடாதேகமடி.

தித்திக்கவூறுமடிசித்தமுடையார்க்குப்
பத்திக்கடலுட்பதித்தபரஞ்சோதியடி.

உள்ளுணர்வாய்நின்றவர்தமுணர்வுக்குணர்வாண்டி
எள்ளளவுமுள்ளதிலேயேதிக்குறையாண்டி.

தூருந்தலையுமிலான்றோற்றமொடுக்கமிலான்
ஆருமறியாமலகண்டமாய்நின்றாண்டி.

எத்தனையோவண்டத்திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலும்அணுவுங்குறையாண்டி.

வாக்குமனமும்வடிவுமிலாவான்பொருள்காண்
போக்கும்வரவுமிலான்பொருவரியபூரணன்காண். (௬௭)

காட்சிக்கெளியான்காண்கண்டாலுங்காணான்காண்
மாட்சிமனம்வைத்தார்க்குமாணிக்கத்துள்ளொளிகாண்.

வாழ்த்தியவனைவழிபட்டால்மன்னுயிர்கள்
தோற்றவரியான்காண்சொல்லிறந்தசோதியன்காண்.

ஐயமறுத்தவனையாராய்வாருண்டானால்
வையகத்தேவந்துமலர்ப்பாதம்வைத்திடுவான்.

அணுவுக்குமேருவுக்குமகம்புறமாய்நின்றான்காண்
கணுமுற்றஞானக்கரும்பின்றெளிவான்காண்.

எந்நாளுமிந்நாளுமிப்படியாயப்படியாய்ச்
சொன்னாலுங்கேளான்காண்சோத்திரத்திற்கொள்ளான்காண்

ஆத்தாளுக்காத்தாளாமப்பனுக்குமப்பனுமாம்
கோத்தார்க்குக்கோத்தநிலைகொண்டகுணக்கடல்காண்.

இப்போதிதோடியெத்தனைநாளுள்ளதடி
அப்போதைக்கப்போதருளறிவுந்தந்தாண்டி.

பற்றற்றார்பற்றாகப்பற்றியிருந்தாண்டி
குற்றமறுத்தாண்டிகூடியிருந்தாண்டி.

வெட்டவெளியிலெனைமேவியிருந்தாண்டி
பட்டப்பகலிலடிபார்த்திருந்தாரெல்லோரும்.

வாழ்வானவாழ்வெனக்குவந்ததடிவாழாமல்
தாழாமற்றாழ்ந்தேண்டிசற்றுங்குறையாமல்.

பொய்யானவாழ்வெனக்குப்போதுமெனக்காணேண்டி
மெய்யானவாழ்வெனக்குவெறும்பாழாய்விட்டதடி.

கன்னியழித்தவனைக்கண்ணாரக்கண்டேண்டி
என்னியல்புநானறியேனீதென்னமாயமடி.

சொல்லாலேசொல்லுதற்குச்சொல்லவாயில்லையடி
எல்லாருங்கண்டிருந்துமிப்போதறியார்கள்.

கண்மாயமிட்டாண்டிகருத்துமிழந்தேண்டி
யுண்மாயமிட்டவனையுருவழியக்கண்டேண்டி.

என்னசொல்லப்போறேனினிந்தவதிசயத்தை
கன்னியிளங்கமுகுகாய்த்ததடிகண்ணார.

ஆர்ந்தவிடமத்தனையுமருளாயிருக்குமடி
சார்ந்தவிடமெல்லாஞ்சவாதுமணக்குதடி.

இந்தமணமெங்குமியற்கைமணமென்றறிந்து
அந்தசுகாதீதத்தருட்கடலில்மூழ்கினண்டி.

இரும்புநிறைநீர்போலவெனைவிழுங்கிக்கொண்டாண்டி
அரும்புநிறைவாசனைபோலன்றேயிருந்தாண்டி.

அக்கினிகற்பூரத்தையறவிழுங்கிக்கொண்டாற்போல்
மக்கினம்பட்டுள்ளேமருவியிருந்தாண்டி.

கடல்நீருமாறும்போற்கலந்துகரைகாணேண்டி
உடலுமுயிரும்போலுட்கலந்துநின்றாண்டி (௫௭)

பொன்னுமுரைமாற்றும்போற்பொருவரியபூரணன்காண்
மன்னுமனுபூதியடிமாணிக்கத்துள்ளொளிபோல்.

கங்குகரையில்லாண்டிகரைகாணக்கப்பலடி
எங்குமளவில்லாண்டியேகமாய்நின்றாண்டி.

தீவகம்போலென்னைச்சேர்ந்தபரசின்மயன்காண்
பாவகமொன்றில்லாண்டிபார்த்திடமெல்லாம்பரங்காண்

உள்ளார்க்குமுள்ளாண்டி யூருமில்லான் பேருமில்லான்
கள்ளப்புலனறுக்கக்காரணமாய்வந்தாண்டி.

அப்பிறப்புக்கெல்லாம் அருளாயமர்ந்தாண்டி.
இப்பிறப்பில்வந்தானிவனுருமெய்ப்பொருள்காண்.

நீரொளிபோலெங்குநிறைந்தநிராமயன்காண்
பாரொளிபோலெங்கும்பரந்தபராபரன்காண்.

நூலாலுணர்வரியநுண்மையினுநுண்மையன்காண்
பாலாறுசர்க்கரைபோற்பரந்தபரிபூரணன்காண்.

உளக்கண்ணுக்கல்லாதூன்கண்ணாலோருமதோ
விளக்குச்சுடரொளிபோன்மேவியிருந்தாண்டி.

கல்லுளிருந்தகனலொளிபோற்காரணமாய்ப்
புல்லியிருந்தும்பொருவரியபூரணன்காண்.

பொற்பூவும்வாசனைபோற்போதம்பிறந்தார்க்குக்
கற்பூவும்வாசனைபோற்காணுக்கயவருக்கு.

மைக்குழம்புமுத்தும்போன்மருவிமறவாதவர்க்குக்
கைக்குட்கனியாகுங்கருவறுத்தகாரணர்க்கு.

பளிங்கிற்பவளமடிபற்றற்றபாவலர்க்குக்
கிளிஞ்சியைவெள்ளியென்பார்கிட்டாதார்கிட்டுவரோ.

எட்டுக்கடங்காண்டியெழுத்திற்பிறவாண்டி
நாட்டினரிகளெல்லாநற்புரவிசெய்தாண்டி.

பஞ்சப்பிரளயத்துமிஞ்சியிருப்பாண்டி
நஞ்சுபொதிமிடற்றுநயனத்தழல்விழியான்.

அகங்காக்கும்புறங்காக்கும் அளவிலாவண்டமுதல்
செகங்காக்குங்காணுத்திசைபத்துங்காக்குமடி.

பேசாப்பிரமமடிபேச்சிறந்தபேரொளிகாண்
ஆசாபாசங்கள் அணுகாதபேரொளிகாண்.

தேசமிறந்தவன்காண்திசையிறந்ததெண்கடல்காண்
ஊசிமுனையூன்றவில்லாவுறுபொருள்காண்.

சிப்பியின்முத்தொளிகாண்சின்மயநோக்கில்லார்க்கு
அப்பிலொளிபோலமர்ந்தவரும்பொருள்காண்.

ஆலாவிருட்சமடியளவிலாச்சாகையடி
மேலாம்பதங்கள்விசும்பூடுருவுமெய்ப்பொருள்காண்.

வங்கிஷமெல்லாங்கடந்துமருவாமலர்ப்பதங்காண்
அங்கிஷமாயெங்கும் ஆய்ந்தவரும்பொருள்காண்.

நாமநட்டமானதடிநவிலவிடமில்லையடி
காமனைக்கண்ணாலெரிக்கக்கனல்விழித்தகாரணன்காண்.

கொட்டாதசெம்பொனடிகுளியாத்தாளமடி
எட்டாதகொம்பிலடியீப்புகாத்தேனமுதம்.

காணிப்பொன்னாணியுடன்கல்லுரைமாற்றின்னதென்றே
ஆணியுடன்கூட்டியடங்கலிட்டுக்கொண்டாண்டி.

அளவிறந்தவண்டத்தாரத்தனைபேருண்டாலும்
பிளவளவுந்தான்சற்றும்பேசாப்பிரமமடி.

கன்னெஞ்சினுள்ளேகழுநீலம்பூத்தாப்போல்
என்னெஞ்சினுள்ளேயிணையடிகள்வைத்தாண்டி.

வேதப்புரவியடிவிரைந்தோடியும்மறியார்
காதற்றஞானமடிகாண்பார்கருத்துடையோர்.

பாசவினையைப்படப்பார்த்தபார்வையுடன்
நேசத்தைக்காட்டியடிநில்லென்றுசொன்னாண்டி.

ஓசையொடுங்குமிடமோங்காரத்துள்ளொளிகாண்
பேசாதிருக்கும்பிரமமிதுவென்றாண்டி.

சின்மயநன்னோக்காற்சிற்சுருபங்காட்டியெனைத்
தன்மயமாயாக்கியேதானவனாய்நின்றாண்டி.

தானென்னைப்பார்த்தாண்டிதன்னைத்தானல்லாமல்
நானென்னசொல்லுவண்டிநவிலவிடமில்லையடி.

இன்றிருந்துநாளைக்கிறக்கிறபேரெல்லாரும்
என்றுபரிபூரணத்திலினிதிருக்கச்சொன்னாண்டி.

பார்க்கிலெளிதலவோபற்றற்றபற்றலவோ
ஆர்க்குமிடங்காட்டவவனிதனில்வந்தாண்டி.

இத்தனைகாலமடியிறந்துபிறந்ததெல்லாம்
இத்தனையுமில்லையடியிரும்பிலுறைநீரானேன்.

எக்காலம்பட்டதடியிறந்துபிறந்ததெல்லாம்
அக்காலமெல்லாம் அழுந்தினேனரகில்.

காலங்கழிந்ததடிகர்மமெல்லாம்போச்சுதடி
நாலுவகைக்கருவுநாமநட்டமாச்சுதடி.

முப்பாழுக்கப்பால்முதற்பாழ்முழுமுதலாய்
இப்போதுவந்தான்காண்எனைவிழுங்கிக்கொண்டான்காண்.

பாலின்கணெய்யிருந்தாற்போலப்பரஞ்சோதி
ஆலிங்கனஞ்செய்தறவிழுங்கிக்கொண்டாண்டி.

தெந்தபடமானேனடிதியிரும்பினீரானேன்
ஒத்தவிடத்தித்திரையென்றேதுமுணர்வறிந்தேன்.

ஒப்புமுவமையுமற்றேதவரிதாயபொருள்
இப்பூவினிற்குருவேயென்னவந்தோன்றுள்வாழி.

ஒப்பாரிசொல்லிடினுமுவமைபிழைத்திடினும்
முப்பாழுங்கற்றுணர்ந்தோர்முன்னோர்பொறுத்தருள்வார்.

அருட்புலம்பல் — முற்றும்பெற்றது.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## இறந்தகாலத்திரங்கல்.

வார்த்தைத்திறமில்லாமனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள்சொல்லிச்சதுரிழந்துகெட்டேனே.

மெத்தமெத்தச்செல்வாக்கில்வேறுமருளடுத்துத்
தத்தித்தலைகீழாய்த்தானடந்துகெட்டேனே.

வழக்கந்தலங்களினுமண்பெண்பொன்னாசையினும்
பழக்கந்தவிராமற்பதியிழந்துகெட்டேனே.

ஆணிபொருந்துமரும்பூமியத்தனையுங்
காணிநமதென்றுகனம்பேசிக்கெட்டேனே.

ஆசாரமில்லாவசடருடன்கூடிப்
பாசாங்குபேசிப்பதியிழந்துகெட்டேனே.

குருமார்க்கமில்லாக்குருடருடன்கூடிக்
கருமார்க்கத்துள்ளேகருத்தழிந்துகெட்டேனே.

ஆலமருந்துமரன்பெருமையெண்ணமல்
பாலர்பெண்டீர்மெய்யென்றுபதியிழந்துகெட்டேனே.

பிணவாசமுற்றபெருங்காயமெய்யென்று
பணவாசையாலேபதியிழந்துகெட்டேனே.

கண்டபுலவர்கனக்கவேதான்புகழ
உண்டவுடம்பெல்லாமுப்பரித்துக்கெட்டேனே.

எண்ணிறந்தசென்மமெடுத்துச்சிவபூசை
பண்ணிப்பிழையாமற்பதியிழந்துகெட்டேனே.

சிற்றெறும்புசற்றுந்தீண்டப்பொறாவுடம்பை
உற்றுறுச்கவுஞ்சுடவுமொப்பித்துமாண்டேனே.

தன்னுடம்புதானேதனக்குப்பகையாமென்
றெண்ணுமுணர்வில்லாமலின்பமென்றுமாண்டேனே.

தோலெலும்புமாங்கிஷமுந்தொல்லன்னத்தால்வளரு
மேலெறும்புஞ்சுற்றமென்றுவீறுப்பாய்மாண்டேனே.
போக்குவரத்தும்பொருள்வரத்துங்காணாமல்
வாக்கழிவுசொல்லிமனமறுகிக்கெட்டேனே.

இறந்தகாலத்திரங்கல்
முற்றுப்பெற்றது.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## நெஞ்சொடுபுலம்பல்.

---

மண்காட்டிப்பொன்காட்டிமாயவிருள்காட்டிச்
செங்காட்டிலாடுகின்றதேசிகனைப்போற்றாமல்
கண்காட்டும்வேசியர்தங்கண்வலையிற்சிக்கிமிக
அங்காடிநாய்போலலைந்தனையேநெஞ்சமே. (௧)

புட்பாசனவணையிற்பொற்பட்டுமெத்தையின்மேல்
ஒப்பாவணிந்தபணியோடாணிநீங்காமல்
இப்பாய்க்கிடத்தியமனுயிர்கொள்ளுமுன்னே
முப்பாழைப்போற்றிமுயங்கிலையேநெஞ்சமே. (௨)

முப்பாழும்பாழாய்முதற்பாழ்வெறும்பாழாய்
அப்பாழுக்கப்பாணின்றாடுமதைப்போற்றாமல்
இப்பாழாம்வாழ்வைநம்பியேற்றவர்க்கொன்றீயாமல்
துப்பாழாய்வந்தவினைசூழ்ந்தனையேநெஞ்சமே. (௩)

அன்னம்பகிர்ந்திங்கலைந்தோர்க்குதவிசெயுஞ்
சென்மமெடுத்துஞ்சிவனருளைப்போற்றாமல்
பொன்னுமனையுமெழிற்பூவையரும்வாழ்வுமிவை
இன்னுஞ்சதமாகவெண்ணினையேநெஞ்சமே. (௪)

முற்றொடர்பிற்செய்தமுறைமையால்வந்தசெல்வம்
இற்றைநாட்பெற்றோமென்றெண்ணாதுபாழ்மனமே
அற்றவர்க்குமீயாமலரன்பூசையோராமல்
கற்றவர்க்குமீயாமற்கண்மறந்துவிட்டனையே. (௫)

மாணிக்கமுத்துவயிரப்பணிபூண்டு
ஆணிப்பொன்சிங்காதனத்திலிருந்தாலும்
காணித்துடலைநமன்கட்டியேகைப்பிடித்தால்
காணிப்பொன்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே. (௬)

கற்கட்டுமோதிரநற்கடுக்கனைநாண்பூண்டு
திக்கெட்டும்போற்றத்திசைக்கொருத்தரானாலும்
பற்கிட்டவேமனுயிர்பந்தாடும்வேளையிலே
கைச்சட்டம்கூடவரக்காண்கிலமேநெஞ்சமே. (௭)

முன்னநீசெய்ததவமுப்பாலுஞ்சேருமன்றிப்
பொன்னும்பணிகளும்பூவையுமங்கேவருமோ
தன்னைச்சதமாகச்சற்குருவைப்போற்றாமல்
கண்ணற்றவந்தகன்போற்காட்சியற்றாய்நெஞ்சமே. (௮)

பையரவம்பூண்டபரமர்திருப்பொற்றாளைத்
துய்யமலர்பறித்துத்தொழுதுவணங்காமல்
கையிலணிவளையுங்காலிவிடும்பாடகமும்
மெய்யென்றிறுமாந்துவிட்டனையேநெஞ்சமே. (௯)

மாதுக்கொருபாகம்வைத்தவரன்பொற்றாளைப்
போதுக்கொருபோதும்போற்றிவருந்தாமல்
வாதுக்குத்தேடியிந்தமண்ணிற்புதைத்துவைத்தே
ஏதுக்குப்போகநீயெண்ணினையேநெஞ்சமே. (௧0)

அஞ்சருளைப்போற்றியைந்துபுலனைத்துறக்க
நெஞ்சேயுனக்குநினைவுநான்சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கிமறுநினைவுவாராமல்
செஞ்சரணத்தாளைச்சிந்தைசெய்வாய்நெஞ்சமே. (௧௧)

அற்புதமாயிந்தவுடலாவியடங்குமுன்னே
சற்குருவைப்போற்றித்தவம்பெற்றுவாழாமல்
உற்பத்திசெம்பொன்உடைமைபெருவாழ்வைநம்பிச்
சர்ப்பத்தின்வாயிற்றவளைபோலானேனே (௧௨)

உற்றாரார்பெற்றாருடன்பிறப்பார்பிள்ளைகளார்
மற்றாரிருந்தாலென்மாளும்போதுதவுவரோ
கற்றாவிழந்தவிளங்கன்றதுபோலேயுருகிச்
சிற்றாகிச்சிற்றின்பஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௧௩)

வீடிருக்கத்தாயிருக்கவேண்டுமனையாளிருக்கப்
பீடிருக்கவூணிருக்கப்பிள்ளைகளுந்தாமிருக்க
மாடிருக்கக்கன்றிருக்கவைத்தபொருளிருக்கக்
கூடிருக்கநீபோனகோலமென்னகோலமே (௧௪)

சந்தனமுங்குங்குமமுஞ் சாந்தும்பரிமளமும்
விந்தைகளாப்பூசிமிகுவேடிக்கையொய்யாரக்
கந்தமலர்சூடுகின்றகன்னியருந்தாமிருக்க
எந்தவகைபோனாயென்றெண்ணிலையேநெஞ்சமே. (௧௫)

காற்றுத்துருத்திகடியவினைக்குள்ளான
ஊற்றைச்சடலத்தையுண்டென்றிறுமாந்து
பார்த்திரங்கியன்னம்பசித்தோருக்கீயாமல்
ஆற்றுவெள்ளம்போலவளாவினையேநெஞ்சமே. (௧௬)

நீர்க்குமிழிவாழ்வைநம்பிநிச்சயமென்றேயெண்ணிப்
பாக்களவாமன்னம்பசித்தோர்க்களியாமல்
போர்க்குளெமதூதன்பிடித்திழுக்கும்போது
ஆர்ப்படுவாரொன்றேயறிந்திலையேநெஞ்சமே. (கஎ)

சின்னஞ்சிறுநுதலாள்செய்தபலவினையான்
முன்னந்தமார்பின்முளைத்தசிலந்திவிம்மி
வன்னந்தளதளப்பமயங்கிவலைக்குள்ளாகி
அன்னம்பகிர்ந்துண்ணவறிந்திலையேநெஞ்சமே. (கஅ)

ஓட்டைத்துருத்தியையுடையும்புழுக்கூட்டை
ஆட்டுஞ்சிவசித்தாருளைமிகப்போற்றியே
வீட்டைத்திறந்துவெளியையொளியாலமைத்துக்
காட்டும்பொருளிதென்றுகருதிலையேநெஞ்சமே. (கக)

ஊன்பொதிந்தகாயமுளைந்தபுழுக்கூட்டைத்
தாண்சுமந்ததல்லால்நீசற்குருவைப்போற்றுமல்
கான்பரந்தவெள்ளங்கரைபுரளக்கண்டேகி
மீன்பரந்தாற்போலேவிசாரமுற்றாய்நெஞ்சமே. (உ0)

உடக்கையொருக்கியுயிரையடைத்துவைத்த
சடக்கைச்சதமென்றுசார்ந்தங்கிழமாந்தை
உடக்கைத்தகர்த்தேயுயிரையமன்கொள்கையிலே
யடக்கமாய்வைத்தபொருளங்குவரமாட்டாதே. (உக)

தித்திக்குந்தேனைத்தெவிட்டாததெள்ளமுதை
முத்திக்குவித்தானமுப்பாழைப்போற்றுமல்
பற்றிப்பிடித்தியமன்பாசத்தாற்கட்டும்வண்ணம்
சுற்றியிருக்கும்வினைசூழ்ந்தனையேநெஞ்சமே. (உஉ)

அஞ்செழுத்தாயெட்டெழுத்தாயைம்பத்தோரட்சரமாய்ப்
பிஞ்செழுத்தாய்நின்றபெருமானைப்போற்றுமல்
வஞ்சகமாயுற்றமுலைமாதர்வலைக்குள்ளாகிப்
பஞ்சரித்துத்தேடிப்பாழுக்கிறைத்தோமே. (உங)

அக்கறுகுகொன்றைதும்பையம்புலியுஞ்சூடுகின்ற
சொக்கர்திருத்தாளைத்தொழுதுவணங்காமல்
மக்கள்பெண்டிர்சுற்றமுடன்வாழ்வைமிகநம்பியன்பாய்
எக்காலமுமுண்டென்றெண்ணினையேநெஞ்சமே. (உச)

ஆண்டகுருவினருளைமிகப்போற்றி
வேண்டுங்கயிலாயவீட்டுவழிபாராமல்
பூண்டகுழன்மாதுநல்லார்பொய்மாய்கைக்குள்ளாகித்
தூண்டிலகப்பட்டுத்துடிகெண்டையானேனே. (உரு)

ஏணிப்பழுவாமிருளையறுத்தாளமுற்றும்
பேணித்தொழுங்கயிலைபேறுபெறமாட்டாமல்
காணவரும்பொருளாய்க்கண்கலக்கப்பட்டடியேன்
ஆணியற்றமாமரம்போலாகினனே நெஞ்சமே. (௨௬)

கோத்துப்பிரகாசங்கொண்டுருகியண்டமெல்லாம்
காத்தபடியேகயிலாயஞ்சேராமல்
வேற்றுருவப்பட்டடியேன்வெள்ளம்போலுள்ளுருகி
ஏற்றுங்கழுவிலிருந்தபிணமானேனே. (௨௭)

நிலைவிட்டுடலையுயிர்நீங்கியகலுமுன்னே
சிலைதொட்டவேடனைச்சிற்றின்றனைச்சேராமல்
வலைபட்டுழலுகின்றமான்போற்பரதவித்துத்
தலைகெட்டநூலதுபோற்றட்டழிந்தாய்நெஞ்சமே. (௨௮)

முடிக்குமயிர்ப்பொல்லாமுழுக்குரம்பைமின்றரின்
இடைக்குநடைக்குமிதங்கொண்டவார்த்தைசொல்லி
அடிக்கொண்டதில்லைவனத்தையனைநாயனையேன்
விடக்கையிழந்தமிருகமதுவானேனே. (௨௯)

பூவாணர்போற்றும்புகழ்மதுரைச்சொக்கரது
சீர்பாதம்போற்றிச்சிவலோகஞ்சேராமல்
தாவாரந்தோறுந்தலைபுகுந்தநாய்போலே
ஆகாதநெஞ்சமேயலைந்துதிரிந்தாயே. (௩௦)

பத்தெட்டாயீரைந்தாய்ப்பதின்மூன்றிரண்டொன்றாய்
ஒத்திட்டுநின்றதோரோவியத்தைப்போற்றாமல்
தெத்திட்டுநின்றதிரிகண்ணிக்குள்ளாகி
வித்திட்டாய்நெஞ்சேவிடவுமறியாயே. (௩௧)

அஞ்சுமுருவாகியைமூன்றுமெட்டுமொன்றாய்
மிஞ்சியிருந்தவிளக்கொளியைப்போற்றாமல்
பஞ்சிலிடுவன்னியைப்போற்பற்றிப்பிடியாமல்
நஞ்சுண்டகெண்டையைப்போல்நானலைந்துகெட்டேனே. (௩௨)

ஊனமுடனேயுடையும்புழுக்கூட்டை
மானமுடனேசுமந்துமண்ணுலகின்மாளாமல்
ஆனதொருபஞ்சவர்களாண்டிருந்ததேசம்விட்டுப்
போனதுபோலேநாம்போய்ப்பிழைத்தோமில்லையே. (௩௩)

ஊறைபிறைக்கின்றவுப்பிருந்தபாண்டத்தை
நாறாமல்நாறிநழுவும்புழுக்கூட்டை
வீறும்புரத்தைவிரும்புகின்றதெப்படியென்
றாறுதநாட்டிலகன்றிருந்தேனில்லையே. (௩௪)

அரியவரிதேடியறியாவொருமுதலைப்
பரிவுடனேபோற்றும்பரஞ்சுடரைப்போற்றாமல்
கரியபெருவாழ்வைநம்பிக்காமத்தழுந்தியே
அரிவாயிற்பட்டகரியதுபோலானேனே. (௩௫)

தந்திரத்தையுன்னித்தவத்தைமிகநிறுத்தி
மந்திரத்தையுன்னிமயங்கித்தடுமாறி
விந்துருகிநாதமாமேலொளியைக்காணாமல்
அந்தரத்தேசோலெறிந்தஅந்தகன்போலானேனே. (௩௬)

விலையாகிப்பாணனுக்குவீறடிமைப்பட்டதுபின்
சிலையார்கைவேடனெச்சிற்றின்றானைப்போற்றாமல்
அலைவாய்த்துரும்பதுபோலாணவத்திலைலழுங்கி
யுலைவாய்மெழுகதுபோலுருகினையேநெஞ்சமே. (௩௭)

நெஞ்சொடுபுலம்பல்
முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்
அருளிச்செய்த

## பூரணமாலை.

---

மூலத்துதித்தெழுந்தமுக்கோணசக்கரத்துள்
வாலைதனைப்போற்றாமல்மதிமறந்தேன்பூரணமே. (௧)

உந்திக்கமலத்துதித்துநின்றபிரமாவைச்
சந்தித்துக்காணமற்றட்டழிந்தேன்பூரணமே. (௨)

நாவிக்கமலநடுநெடுமால்காணாமல்
ஆவிகெட்டியானுமறிவழிந்தென்பூரணமே. (௩)

உருத்திரனையிரதயத்திலுண்மையுடன்பாராமல்
கருத்தழிந்துநானுங்கலங்கினேன்பூரணமே. (௪)

விசுத்திமயேசுரனைவிழிதிறந்துபாராமல்
பசித்துருகிநெஞ்சம்பதறினேன்பூரணமே. (௫)

நெற்றிவிழியுடையநிர்மலசதாசிவத்தைப்
புத்தியுடன்பாராமற்பொறியழிந்தேன்பூரணமே. (௬)

நாதவிந்துதன்னைநயமுடனேபாராமல்
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே. (௭)

உச்சிவெளியையுறுதியுடன்பாராமல்
அச்சமுடனானுமறிவழிந்தேன்பூரணமே. (௮)

மூக்குமுனையைமுழித்திருந்துபாராமல்
ஆக்கைகெட்டுநானுமறிவழிந்தேன்பூரணமே. (௯)

இடைபிங்கலையினியல்பறியமாட்டாமல்
தடையுடனேயானுந்தயங்கினேன்பூரணமே. (௧0)

ஊனுக்குணீநின்றுலாவினதைக்காணமல்
நானென்றிருந்துநலனழிந்தேன்பூரணமே. (௧௧)

மெய்வாழ்வைநம்பிவிரும்பிமிகவாழாமல்
பொய்வாழ்வைநம்பிப்புலம்பினேன்பூரணமே. (௧௨)

பெண்டுபிள்ளைதந்தைதாய்பிறவியுடன்சுற்றமிவை
யுண்டென்றுநம்பியுடலழிந்தேன்பூரணமே. (௧௩)

தண்டிகைபல்லாக்குடனேசகலசம்பத்துகளும்
உண்டென்றுநம்பியுணர்வழிந்தேன்பூரணமே. (௧௪)

இந்தவுடலுயிரையெப்போதுந்தான்சதமாப்
பந்தமுற்றுநானும்பதமழிந்தேன்பூரணமே. (௧௫)

மாதர்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்து
போதமயங்கிப்பொறியழிந்தேன்பூரணமே. (௧௬)

சரியைகிரியாயோகந்தான்ஞானம்பாராமல்
பரிதிகண்டமதியதுபோற்பயனழிந்தேன்பூரணமே. (௧௭)

மண்பெண்பொன்னாசைமயக்கத்திலேவிழுந்து
கண்கெட்டமாடதுபோற்கலங்கினேன்பூரணமே. (௧௮)

தனிமுதலைப்பார்த்துத்தனித்திருந்துவாழாமல்
அனியாயமாய்ப்பிறந்திங்கலைந்துநின்றேன்பூரணமே. (௧௯)

ஈராறுதண்கலைக்குளிருந்துகூத்தாடினதை
ஆராய்ந்துபாராமலறிவழிந்தேன்பூரணமே. (௨0)

வாசிதனைப்பார்த்துமகிழ்ந்துனைத்தான்போற்ருமல்
காசிவரைபோய்த்திரிந்துகாலலுத்தேன்பூரணமே. (௨௧)

கருவிகரணாற்றிற்கலந்துவிளையாடினதை
இருவிழியாற்பாராமலீடழிந்தேன்பூரணமே. (௨௨)

உடலுக்குள்நீநின்றுலாவினதைக்காணமல்
கடமலைதோறுந்திரிந்துகாலலுத்தேன்பூரணமே. (௨௩)

எத்தேசகாலமுநாமிறவாதிருப்பமென்று
உற்றனைத்தான்பாராமலுருவழிந்தேன்பூரணமே. (௨௪)

எத்தனைதாய்தந்தையிவர்களிடத்தேயிருந்து
பித்தனாயானும்பிறந்திறந்தேன்பூரணமே. (௨௫)

பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்யானுமுன்றன்
பொற்றுணைத்தாள்தந்துபுகலருள்வாய்பூரணமே. (௨௬)

உற்றாரழுதலுத்தாருறன்முறையார்சுட்டலுத்தார்
பெற்றலுத்தாள்தாயார்பிறந்தலுத்தேன்பூரணமே. (௨௭)

பிரமன்படைத்தலுத்தான்பிறந்திறந்துநானலுத்தேன்
உரமுடையவக்கினிதானுண்டலுத்தான்பூரணமே. (௨௮)

எண்பத்துநான்குநூறாயிரஞ்செனனமுஞ்செனித்துப்
புண்பட்டுநானும்புலம்பினேன்பூரணமே. (௨௯)

என்னையறியாமலெனக்குள்ளேநீயிருக்க
உன்னையறியாமலுடலிழந்தேன்பூரணமே. (௩௦)

கருவாயுருவாய்க்கலந்துலகெலாநீயாய்
அருவாகிநின்றதறிகிலேன்பூரணமே. (௩௧)

செம்பொற்கமலத்திருவடியைப்போற்றாமல்
பம்பைகொட்டவாடும்பசாசானேன்பூரணமே. (௩௨)

எனக்குள்ளேநீயிருக்கவுனக்குள்ளேநானிருக்க
மனக்கவலைதீரவரமருள்வாய்பூரணமே. (௩௩)

எழுவகைத்தோற்றத்திருந்திவிளையாடினதைப்
பழுதறவேபாராமற்பயனிழந்தேன்பூரணமே. (௩௪)

சாதிபேதங்கள்தனையறியமாட்டாமல்
வாதனையால்நின்றுமயங்கினேன்பூரணமே. (௩௫)

குலமொன்றாய்நீபடைத்தகுறியையறியாமல்யான்
மலபாண்டத்துள்ளிருந்துமயங்கினேன்பூரணமே. (௩௬)

அண்டபிண்டமெல்லாமணுவுக்கணுவாகநீ
கொண்டவடிவின்குறிப்பறியேன்பூரணமே. (௩௭)

சகஸ்திரத்தின்மேலிருக்குஞ்சற்குருவைப்போற்றாம
லகத்தினுடையாணவத்தாலறிவழிந்தேன்பூரணமே. (௩௮)

ஐந்துபொறியையடக்கியுனைப்போற்றாமல்
நைந்துருகிநெஞ்சநடுங்கினேன்பூரணமே. (௩௯)

என்னைத்திருக்கூத்தாவிப்படிநீயாட்டுவித்தாய்
உன்னையறியாதுடலழிந்தேன்பூரணமே. (௪௦)

நரம்புதசைதோலெலும்புநாற்றத்துக்குள்ளிருந்து
வரம்பறியமாட்டாமல்மயங்கினேன்பூரணமே. (௪௧)

சிலந்தியுடைநூல்போற்சீவசெந்துக்குள்ளிருந்த
நலந்தனைத்தான்பாராமல்நலமழிந்தேன்பூரணமே. (௪௨)

குருவாய்ப்பரமாகிக்குடிலைசத்திநாதவிந்தாய்
அருவாயுருவானதறிகிலேன்பூரணமே. (௪௩)

ஒளியாய்க்கதிர்மதியாயுள்ளிருளாயக்கினியாய்
வெளியாகிநின்றவியனறியேன்பூரணமே. (௪௪)

இடையாகிப்பிங்கலையாயெழுந்தசுழுமுனையாய்
உடலுயிராய்நீயிருந்தவுளவறியேன்பூரணமே. (௪௫)

மூலவித்தாய்நின்றுமுளைத்துடல்தோறும்மிருந்து
காலனெனவழிக்குங்கணக்கறியேன்பூரணமே. (௪௬)

உள்ளும்புறம்புமாயுடலுக்குள்நீயிருந்த
தெள்ளளவுநானறியாதிருந்தேனேபூரணமே. (௪௭)

தாயாகித்தந்தையாய்த்தமர்கிளைஞர்சுற்றமெல்லாம்
நீயாகிநின்றநிலையறியேன்பூரணமே. (௪௮)

விலங்குபுள்ளூர்வனவசரம்விண்ணவர்நீர்ச்சாதிமனுக்
குலங்களெழுவகையில்நின்றகுறிப்பறியேன்பூரணமே. (௪௯)

ஆணாகிப்பெண்ணாயலியாகிவேற்றுருவாய்
மாணாகிநின்றவகையறியேன்பூரணமே. (௫0)

வாலையாய்ப்பக்குவமாய்வளர்ந்துகிழந்தானாகும்
பாலையாய்நின்றபயனறியேன்பூரணமே. (௫௧)

பொய்யாய்ப்புவியாய்ப்புகழ்வாரிதியாகி
மெய்யாகிநின்றவியனறியேன்பூரணமே. (௫௨)

பூவாய்மணமாகிப்பொன்னாகிமாற்றாகி
நாவாய்ச்சொல்லானநயமறியேன்பூரணமே. (௫௩)

முதலாய்நடுவாகிமுப்பொருளாய்மூன்றுலகர்
விதமாகிநின்றவியலறியேன்பூரணமே. (௫௪)

ஊனாயுடலுயிராயுண்ணிறைந்தகண்ணொளியாய்த்
தேனாய்ருசியானதிறமறியேன்பூரணமே. (௫௫)

வித்தாய்மரமாய்விளைந்தகனிகாய்பூவாய்ச்
சித்தாகிநின்றதிறமறியேன்பூரணமே. (௫௬)

ஐவகையும்பெற்றுலகவண்டபகிரண்டமெல்லாந்
தெய்வமெனநின்றதிறமறியேன்பூரணமே. (௫௭)

மனமாய்க்கனவாகிமாய்கையாயுள்ளிருந்து
நினைவாகிநின்றநிலையறியேன்பூரணமே. (௫௮)

சத்திசிவமிரண்டாய்த்தான்முடிவிலொன்றாகிச்
சித்திரமாய்நின்றதிறமறியேன்பூரணமே. (௫௯)

பொறியாய்ப்புலனாகிப்பூதபேதப்பிரிவாய்
அறிவாகிநின்றவளவறியேன்பூரணமே. (௬0)

வானிற்கதிர்மதியாய்வளர்ந்துபின்னொன்றானதுபோல்
ஊனுடலுக்குள்ளிருந்தவுயிர்ப்பறியேன்பூரணமே. (௬௧)

பொய்யும்புலையுமிகப்பொருந்திவீண்பேசலன்றி
ஐயோவுனையுரைக்கவறிகிலேன்பூரணமே. (௬௨)

நிரந்தரமாயெங்குநின்றுவிளையாடினதைப்
பரமதுவேயென்னப்பதமறியேன்பூரணமே. (௬௩)

சொல்வாய்பிறப்பிப்பாய்கூடவிருந்தேசுகிப்பாய்
செல்வாய்பிறர்க்குச்செயலறியேன்பூரணமே. (௬௪)

வாரிதியாய்வையமெல்லாமன்னுமண்டபிண்டமெல்லாஞ்
சாருதியாய்நின்றதலமறியேன்பூரணமே. (௬௫)

வித்தாய்மரமாய்வெளியாயொளியாய்நீ
சத்தாயிருந்ததரமறியேன்பூரணமே. (௬௬)

தத்துவத்தைப்பார்த்துமிகத்தன்னையறிந்தறிவால்
உய்த்துனைத்தான்பாராமலுய்வாரோபூரணமே. (௬௭)

ஒன்றாயுயிராயுடல்தோறுநீயிருந்தும்
என்றுமறியார்களேழைகள்தாம்பூரணமே. (௬௮)

நேற்றென்றுநாளையென்றுநினைப்புமறப்பாய்ப்படைத்து
மாற்றமாய்நின்றவளமறியேன்பூரணமே. (௬௯)

மனம்புத்திசித்தமகிழறிவாங்காரமதாய்
நினைவாந்தலமானநிலையறியேன்பூரணமே. (௭0)

உருப்பேதமின்றியுயர்ந்தசத்தபேதமதாய்க்
குருப்பேதமாய்வந்தகுணமறியேன்பூரணமே. (௭௧)

சட்சமயபேதங்கள்தான்வகுத்துப்பின்னுமொரு
உட்சமயமுண்டென்றுரைத்தனையேபூரணமே. (௭௨)

முப்பத்திரண்டுறுப்பாய்முனைந்துபடைத்துள்ளிருந்த
செப்படுவித்தைத்திறமறியேன்பூரணமே. (௭௩)

என்னதான்கற்றாலென்னெப்பொருளும்பெற்றாலென்
உன்னையறியாதாருய்வரோபூரணமே. (௭௪)

கற்றறிவோமென்பார்காணார்களுன்பதத்தைப்
பெற்றறியார்தங்களுக்குப்பிறப்பறுமோபூரணமே. (௭௫)

வானென்பாரண்டமென்பார்வாய்ஞானமேபேசித்
தானென்பார்வீணர்தனையறியார்பூரணமே. (௭௬)

ஆதியென்பாரந்தமென்பாரதற்குண்டுவாயிருந்த
சோதியென்பார்நாதத்தொழிலறியார்பூரணமே. (எஎ)

மூச்சென்பாருள்ளமென்பார்மோனமெனுமோட்சமென்பார்
பேச்சென்பாருன்னுடையபேரறியார்பூரணமே. (எஅ)

பரமென்பார்பானுவென்பார்பாழ்வெளியாய்நின்ற
வரமென்பாருன்றன்வழியறியார்பூரணமே. (எகூ)

எத்தனைபேரோவெடுத்தெடுத்துத்தானுரைத்தார்
அத்தனைபேர்க்கொன்றானதறிகிலேன்பூரணமே. (அ0)

நகாரமகாரமென்பார்நடுவேசிகாரமென்பார்
வகாரயகாரமென்பார்வகையறியார்பூரணமே. (அக)

மகத்துவமாய்க்காமமயக்கத்துக்குள்ளிருந்து
பகுத்தறியமாட்டாமற்பயனழிந்தேன்பூரணமே. (அஉ)

உண்மைப்பொருளையுகந்திருந்துபாராமற்
பெண்மயக்கத்தாலேபிறந்திறந்தேன்பூரணமே. (அங)

வாயாரவாழ்த்திமகிழ்ந்துனைத்தான்போற்றாமல்
காயமெடுத்துக்கலங்கினேன்பூரணமே. (அச)

சந்திரனைமேகமதுதான்மறைத்தவாறதுபோற்
பந்தமுறயானுமுனைப்பார்க்கிலேன்பூரணமே. (அரு)

செந்தாமரைத்தாளைத்தினந்தினமும்போற்றாமல்
அந்தரமாய்நின்றிங்கலைந்தேனன்பூரணமே. (அசு)

நீர்மேற்குமிழிபோல்நிலையற்றகாயமிதைத்
தாரகமென்றெண்ணிநான்றட்டழிந்தேன்பூரணமே. (அஎ)

நெஞ்சமுருகிநினைத்துனைத்தான்போற்றிநெடு
வஞ்சகத்தைப்போக்கவகையறியேன்பூரணமே. (அஅ)

எள்ளுக்குளெண்ணெய்போலெங்குநிறைந்திருந்த
துள்ளமறியாதுருகினேன்பூரணமே. (அகூ)

மாயாப்பிரபஞ்சமயக்கத்திலேவிழுந்தே
யோயாச்சனனமொழித்திலேன்பூரணமே. (கூ0)

பூசையுடன்புவனபோகமெனும்போக்கியத்தால்
ஆசையுற்றேநானுமறிவழிந்தேன்பூரணமே. (கூக)

படைத்துமழித்திடுவாய்பார்க்கிற்பிரமாவெழுத்தைத்
தொடைத்துச்சிரஞ்சீவியாத்துலங்குவிப்பாய்பூரணமே. (கூஉ)

மந்திரமாய்ச்சாத்திரமாய்மறைநான்காய்நீயிருந்த
தந்திரத்தைநானறியத்தகுமோதான்பூரணமே. (கூங)

அல்லாய்ப்பகலாயனவரதகாலமெனுஞ்
சொல்லாய்ப்பகுத்ததொடர்பறியேன்பூரணமே. (கூச)

நரகஞ்சுவர்க்கமெனநண்ணுமிரண்டுண்டாயும்
அரகராவென்பதறிகிலேன்பூரணமே. (கூரு)

பாவபுண்ணியமென்னும்பகுப்பாய்ப்படைத்தழித்திங்
காவலையுண்டாக்கிவைத்தவருளறியேன்பூரணமே. (கூசு)

சாந்தமென்றுங்கோபமென்றுஞ்சாதிபேதங்களென்றும்
பாந்தமென்றும்புத்தியென்றும்படைத்தனையேபூரணமே. (கூஎ)

பாசமுடலாய்ப்பசுவதுவுந்தானுயிராய்
நேசமுடனீபொருளாய்நின்றனையேபூரணமே. (கூஅ)

ஏதிலடியாரிரங்கியிகத்தில்வந்துன்
பாதமதில்தாழப்பரிந்தருள்வாய்பூரணமே. (கூகூ)

நானேநீநீயேநானுமிரண்டுமொன்றானால்
தேனின்ருசியதுபோற்றெவிட்டாய்நீபூரணமே. (க00)

முடிவிலொருசூனியத்தைமுடித்துநின்றுபாராமல்
அடியிலொருசூனியத்திலலைந்தேனேபூரணமே. (க0க)

பூரணமாலைதனைப்புத்தியுடனோதினர்க்குத்
தாரணியில்ஞானந்தழைப்பிப்பாய்பூரணமே. (க0உ)

பூரணமாலை முற்றும்.

## நெஞ்சொடுமகிழ்தல்.

:0:

அன்றுமுதலின்றளவுமாக்கையொடுசூட்சியுமாய்
நின்றநிலையறியநேசமுற்றாய்நெஞ்சமே. (க)

அங்கங்குணர்வாயறிவாகியேநிரம்பி
எங்கெங்குமானதிலேயேகரித்தாய்நெஞ்சமே. (உ)

அலையாதபேரின்பவானந்தவெள்ளத்தில்
நிலையாயுருவிறந்துநின்றனையேநெஞ்சமே. (ங)

பாராமற்பதையாமற்பருகாமல்யாதொன்றும்
ஓராதுணர்வுடனேயொன்றினையேநெஞ்சமே. (ச)

களவிறந்துகொலையிறந்துகாண்பனவுங்காட்சியும்போ
[illegible]றந்துநின்றதிலேயன்புற்றாய்நெஞ்சமே. (ரு)

[illegible]றந்துசுட்டிறந்துபின்னிறந்துமுன்னிறந்து
[illegible]ந்துநின்றதிலேநேசமுற்றாய்நெஞ்சமே. (சு)

விண்ணிறந்துமண்ணிறந்துவெளியிறந்துவொளியிறந்து
எண்ணிறந்துநின்றநிலையேகரித்தாய்நெஞ்சமே. (௭)

பார்த்தவிடமெங்கும்பரமெனவேயுட்புறம்புங்
கோத்தபடியுண்மையெனக்கொண்டனையேநெஞ்சமே. (௮)

ஊரிறந்துபேரிறந்துவொளியிறந்துவெளியிறந்து
சீரிறந்துநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (௯)

ஆண்பெண்ணலியென்றழைக்கவரிதாய்நிறைந்து
காணவரிதாயவிடங்கண்ணுற்றாய்நெஞ்சமே. (௧௦)

ஆங்காரமச்சமகற்றியறிவினொடு
தூங்காமற்றூங்கிச்சுகம்பெற்றாய்நெஞ்சமே. (௧௧)

ஆதியாய்நின்றவகண்டபரிபூரணத்தைச்
சாதியாநின்றவிடஞ்சார்வுற்றாய்நெஞ்சமே. (௧௨)

விருப்புவெறுப்பில்லாதவெட்டவெளியதனில்
இருப்பேசுகமென்றிருந்தனையேநெஞ்சமே. (௧௩)

ஆருமுருப்பேரண்டத்தப்புறத்துமிப்புறத்தும்
நீருமுப்புமென்னநிலைபெற்றாய்நெஞ்சமே. (௧௪)

உடனாகவேயிருந்துமுணரவரியானோடு
கடனீருமாறும்போற்கலந்தனையேநெஞ்சமே. (௧௫)

நெடியசகத்தைப்போக்கிநின்றசழக்கறுத்துப்
படிகத்துக்கும்பம்போற்பற்றினையேநெஞ்சமே. (௧௬)

மேலாகியெங்கும்விளங்கும்பரம்பொருளிற்
பாலூறுமென்சுவைபோற்பற்றினையேநெஞ்சமே. (௧௭)

நீரொடுதண்ணலிவிண்டுநீரானவாறேபோல்
ஊரொடுபேரில்லானோடொன்றினையேநெஞ்சமே. (௧௮)

இப்பிறப்பைப்பாழ்படுத்தியிருந்தபடியேயிருக்கச்
செப்பவரிதாயவிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (௧௯)

மேலாம்பதங்களெல்லாம்விட்டுவிட்டாராய்ந்து
நாலாம்பதத்தினடந்தனையேநெஞ்சமே. (௨௦)

கடங்கடங்கடோறுங்கதிரவனூடாடி
யடங்குமிடந்தானறிந்தன்புற்றாய்நெஞ்சமே. (௨௧)

கற்றவனாய்க்கேட்டவனாய்க்காணானாய்க்காண்பவனாய்
உற்றவனாய்நின்றநிலையொன்றுபட்டாய்நெஞ்சமே. (௨௨)

நாலுவகைக்கரணநல்குபுலனைந்துமொன்றாய்ச்
சிலமுற்றுநின்றநிலைசேர்ந்தனையேநெஞ்சமே. (௨௩)

விட்டிடமுந்தொட்டிடமும்விண்ணிடமுமண்ணிடமுங்
கட்டுமொருதன்மையெனக்கண்ணுற்றாய்நெஞ்சமே. (உச)

எந்தெந்தநாளுமிருந்தபடியேயிருக்க
அந்தச்சுகாதீதமாக்கினையேநெஞ்சமே. (உரு)

வாக்கிறந்துநின்றமனோகோசரந்தனிலே
தாக்கறவேநின்றதிலேதலைசெய்தாய்நெஞ்சமே. (உசா)

எத்தேசமுநிறைந்தேயெக்காலமுஞ்சிறந்து
சித்தாயசித்தினிடஞ்சேர்ந்தனையேநெஞ்சமே. (உஎ)

தாழாதேநீளாதேதன்மயமதாய்நிறைந்து
வாழாதேவாழமருவினையேநெஞ்சமே. (உஅ)

உள்ளும்புறம்புமுவட்டாதவானந்தக்
கள்ளருந்திநின்றதிலேகண்ணுற்றாய்நெஞ்சமே. (உகூ)

வாதனைபோய்நிட்டையும்போய்மாமௌனராச்சியம்போய்
பேதமறநின்றவிடம்பெற்றனையேநெஞ்சமே. (ங0)

இரதம்பிரிந்துகலந்தேகமாம்வாறேபோல்
விரகந்தவிர்ந்தனல்பால்மேவினையேநெஞ்சமே. (ஙக)

சோதியான்சூழ்பனிநீர்சூறைகொளுமாறேபோல்
நீதிகுருவின்றிருத்தாள்நீபெற்றாய்நெஞ்சமே. (ஙஉ)

நெஞ்சொடுமகிழ்தல் முற்றிற்று.

---

பட்டணத்துப்பிள்ளையார்

## உடற்கூற்றுவண்ணம்.

தன தன தான, தன தன தான, தந்த தனந்தன தந்த தனந்த
தனனதனந்த, தனனதனந்த, தானனதானன தானதனந்த.

ஒருமடமாதுமொருவனுமாகி, யின்பசுகந்தருமன்புபொருந்தி
யுணர்வுகலங்கியொழுகியவிந்து, வூறுசுரோணிதமீதுகலந்து.

பனியிலோர்பாதிசிறுதுளிமாது, பண்டியில்வந்துபுகுந்துதிர
ண்டு, பதுமவரும்புகமடமிதென்று, பார்வைமெய்வாய்செவிகால்
கைகளென்ற,

உருவமுமாகியுயிர்வளர்மாத,மொன்பதுமொன்றுநிறைந்து
...தே, யுதரமகன்றுபுவியில்விழுந்து, யோகமும்வாரமு நாளு
...

...களிர்கள்சேனைதரவணையாடை, மண்பட்டுவுந்தியுதைந்துகவி
... மடமயில்கொங்கையமுதமருந்தி, யோரறிவீரறிவாகிவ
...

